

# க.பொ.த. (உ.தர)ப் பரீட்சை - 2014

# மதிப்பீட்டு அறிக்கை

## 33 - கணக்கீடு




ஆய்வு அபிவிருத்திக் கிளை
தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

# க.பொ.த (உ.தர)ப் பரீட்சை - 2014

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு




ஆய்வு அபிவிருத்திக் கிளை
தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

**கணக்கீடு**

**மதிப்பீட்டு அறிக்கை - க.பொ.த (உ.தர)ப் பரீட்சை - 2014**

## நிதி அனுசரணை

எதிர்கால அறிவை மையமாகக் கொண்டு பாடசாலை
கல்விமுறையை மாற்றியமைக்கும் செயற்றிட்டம்
(TSEP-WB)

## அறிமுகம்

கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர் தரப் பரீட்சையானது இலங்கையின் உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதிச் சான்றிதழ்ப் பரீட்சையாகும். உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதியில் மாணவர்களின் அடைவு மட்டத்தைச் சான்றுப்படுத்தல் இப் பரீட்சையின் முக்கிய நோக்காக இருந்த போதும் தேசிய பல்கலைக்கழகங்கள், வேறு கல்வி மற்றும் தொழில் பயிற்சி நிறுவனங்கள், தேசிய கல்வியியல் கல்லூரிகள் என்பவற்றுக்குத் தகைமையானோரைத் தெரிவு செய்தலும் இப்பரீட்சையின் பெறுபேறுகளின் அடிப்படையில் இடம்பெறுவதால் அடைவுப் பரீட்சையாகவும் தேர்வுப் பரீட்சையாகவும் க.பொ.த (உ.தர)ப் பரீட்சை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தன்மையைப் பெறுகிறது. மேலும் மூன்றாம் நிலையில் தொழிலில் பிரவேசிப்பதற்கான தகைமையை சான்றுப்படுத்தும் பரீட்சையாகவும் இது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இப்போது இப்பரீட்சைக்காக 2014 ஆம் ஆண்டில் 207304 வரையிலான பாடசாலைப் பரீட்சார்த்திகளும் 40072 வரையிலான தனிப்பட்ட பரீட்சார்த்திகளும் தோற்றியிருந்தனர்.

இப்பரீட்சையில் உயர் அடைவு மட்டத்தைப் பெறுவதற்காக மாணவர்களும் அவர்களின் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்வதற்காக ஆசிரியர்களும் பெற்றோரும் பெரிதும் முயற்சி செய்கின்றனர். இந்த மதிப்பீட்டு அறிக்கையை அவர்களின் அந்த எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றுவதற்கு உதவும் பொருட்டே இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் தயாரித்துள்ளது. இந்த மதிப்பீட்டு அறிக்கையில் உள்ளடக்கப்பட்ட தகவல்கள் பரீட்சையை எதிர்பார்த்திருப்போர், ஆசிரியரிமார், அதிபர்மார், ஆசிரியர் ஆலோசகர்கள், பாடப் பொறுப்புக் கல்விப் பணிப்பாளர்கள் பெற்றோர், கல்வி ஆய்வாளர்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இந்த மதிப்பீட்டு அறிக்கை I, II, III என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

க.பொ.த (உ.தர) கணக்கியல் பாடத்தின் நோக்கம் பாட அடைவு பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி I இல் அடங்கியுள்ளது. இப்பகுதியில் பாடத்திற்கு தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை, அவர்கள் தரங்களைப் பெற்றுள்ள விதம், மாவட்ட மட்டத்தில் பாடசாலைப் பரீட்சார்த்திகள் தரங்களைப் பெற்றுள்ள விதம் வகுப்பாயிடைக்கேற்ப புள்ளிகளின் பரம்பல் ஆகிய பாட அடைவு பற்றிய புள்ளிவிபரத் தகவல்களும் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றில் வினாக்கள் தெரிவு செய்யப்பட்ட விதம், அவ்வினாக்களுக்கும் அவ்வினாக்களின் பகுதிகளுக்கும் புள்ளிகள் பெற்றுள்ள விதம் என்பன பற்றி விரிவாகக் குறிப்பிடும் பாட அடைவு பற்றிய பகுப்பாய்வும் உள்ளடக்கப்பட்டுள்ளன. க.பொ.த (உ.தர)ம் - 2014 பரீட்சையில் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றுக்கான வினாக்கள் அவ்வினாக்களுக்கு பரீட்சார்த்திகள் விடைகள் அளித்திருந்தமை பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி II இல் அடங்கியுள்ளன. அதில் வினாத்தாள் I, II என்பவற்றின் வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடைகள் அளித்தமை பற்றிய அவதானிப்புக்கள், முடிவுகள், பாட அடைவை மேம்படுத்துவதற்கான ஆலோசனைகள் என்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் ஆய்வு அபிவிருத்திக் கிளை மூலம் விடைத்தாள் மதிப்பீட்டில் ஈடுபட்ட பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள் ஆகியோரால் முன்வைக்கப்பட்ட தகவல்கள், அவதானிப்புகள், கருத்துகள், ஆலோசனைகள், மரபு ரீதியான சோதனைக் கோட்பாடு (Classical Testing Theory) மற்றும் உருப்படித் துலங்கள் கோட்பாடு (Item Response Theory) என்பவற்றைப் பயன்படுத்தி பரீட்சார்த்திகளின் துலங்கல்களைப் பகுப்பாய்வு செய்தலினூடாகப் பெறப்பட்ட தகவல்கள் என்பன இந்த மதிப்பீட்டு அறிக்கையை தயாரிப்பதற்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

வினாப்பத்திரத்திலுள்ள ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கும்போது பரீட்சார்த்திகள் கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள், கற்றல் - கற்பித்தல் பணிகள் பற்றிய கருத்துகள், ஆலோசனைகள் என்பனவும் இந்த அறிக்கையில் பகுதி III இல் அடங்கியுள்ளன. பல்வேறு தேர்ச்சிகள் அத்தேர்ச்சி மட்டங்களை அணுகுவதற்கான கற்றல் - கற்பித்தல் செயன்முறையை ஒழுங்கமைக்கும் விதம் என்பன தொடர்பாக இந்த அறிக்கையானது பெரிதும் துணை புரியும் என நம்புகின்றேன்.

எதிர்காலத்தில் தொகுக்கப்படும் மதிப்பீட்டு அறிக்கைகளின் பண்புத்தரத்தை மேம்படுத்தக்கூடிய பயன்தரும் கருத்துகள், ஆலோசனைகள் என்பவற்றை எங்களுக்குச் சமர்ப்பிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்குத் தேவையான தகவல்களை வழங்கிய பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள், ஊக்கத்துடன் பங்களிப்பு வழங்கிய குழு உறுப்பினர்கள், பொறுப்புடன் கடமையாற்றிய இலங்கைப் பரீட்சைத் திணைக்கள அலுவலர்கள், பணிக்குழுவினர் ஆகியோருக்கும் இத்தொகுப்புக்கான நிதி அனுசரணை வழங்கி எதிர்கால அறிவை மையமாகக் கொண்டு பாடசாலை முறைமையை மீளமைக்கும் செயற்றிட்டத்துக்கும் (TSEP - WB) எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார
பரீட்சை ஆணையாளர் நாயகம்.

2016 டிசம்பர் 01
ஆய்வு அபிவிருத்திக் கிளை,
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்,
பெலவத்தை,
பத்தரமுல்ல.

| | | |
|---|---|---|
| வழிகாட்டல் | : | **டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார**<br>பரீட்சை ஆணையாளர் நாயகம் |
| ஒழுங்கமைப்பும் நெறிப்படுத்தலும் | : | **கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை) |
| இணைப்பு | : | **புத்திகா பெரேரா**<br>உதவி பரீட்சை ஆணையாளர் |
| தொகுப்பு | : | **கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை)<br><br>**கலாநிதி டபிள்யூ.வீ.ஏ.டி. கருணாதிலக**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் கல்விப் பிரிவு<br>களனி பல்கலைக்கழகம்<br><br>**கலாநிதி ஹரேந்திர காரியவசம்**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்<br><br>**ரங்கஜீன ஹேரத்**<br>விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| ஆக்கக் குழு | : | **சந்திராணி ரூபசிங்க**<br>இராஜசிங்க மத்திய ம.வி, ஹங்வல<br><br>**டபிள்யு.எம். பிரேமணி பெர்னாந்து**<br>சாந்த பீட்டர்ஸ் கல்லூரி, கொழும்பு 04<br><br>**பீ.எம். ஹதரசிங்க**<br>விசாகா உயர் பெண்கள் பாடசாலை, பதுள்ள<br><br>**ஈ.எம். நவரத்ன**<br>குளி/குளியாபிட்டிய ம.ம.வி, குளியாபிட்டிய |
| மொழிப்பெயர்ப்பு | : | **சி.எல்.எம் நவாஸ்**<br>ஆசிரிய ஆலோசகர்,<br>வலயக் கல்விப் பணிமனை<br>இப்பாகமுவ |
| கணினிப் பக்க வடிவமைப்பு | : | **சுப்ரமணியம் காஞ்சனா**<br>கணினித் தரவுப் பதிவாளர் |
| முகப்பு அட்டை வடிவமைப்பு | : | **வை.எஸ். அனுராதி**<br>அபிவிருத்தி அதிகாரி |

## உள்ளடக்கம்

# பகுதி I

## 1 பாடக் குறிக்கோள்களும் பாட அடைவு தொடர்பான தகவல்களும்

### 1.1 பாடக் குறிக்கோள்கள்

இப்பாடத்திட்டத்தினைப் பின்பற்றுவதனால் மாணவர்,

* கணக்கீட்டின் எண்ணக்கரு ரீதியான சட்டகம் தொடர்பிலான அடிப்படை விளக்கத்தினைப் பெற்றுக் கொள்வார்.
* கணக்கியல் நுட்ப முறைகள் தொடர்பில் பெற்ற அடிப்படை அறிவினைப் பயன்படுத்துவார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையில் வெளிப்படையாகக் காணப்படும் புத்தாக்கங்களை விளங்கிக் கொள்வார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையின் ஊடாகப் பெற்றுக் கொள்ளும் அறிவினை பல்வேறு தொழில் தேவைகளுக்குப் பயன்படுத்துவார்.
* சமூகப் பொருளாதார சூழலொன்றுக்கு வினைத்திறனாகச் செயற்படக் கூடிய முகாமைத்துவத் திறனைப் பெற்றுக்கொள்வார்.
* பல்வேறுபட்ட வணிக அமைப்புக்களின் கணக்கு வைப்பு தொடர்பிலான திறனைப் பெற்றுக் கொள்வார்.
* பாடத்துறையில் தேடியறிதல்களை மேற்கொள்வதன் மூலம் கிடைக்கும் அனுபவத்தினை எதிர்கால ஆய்வு அபிவிருத்திக் கருமங்களுக்கு பயன்படுத்திக் கொள்வார்.
* வளங்களை ஆக்கபூர்வமாகவும், வினைத்திறனாகவும் பயன்படுத்துவதற்கான தேர்ச்சியினை விருத்தி செய்து கொள்வார்.

## 1.2 பாட அடைவு தொடர்பான புள்ளிவிபரத் தகவல்கள்

### 1.2.1 இப்பாடத்துக்குத் தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை

| மொழிமூலம் | பாடசாலை | தனிப்பட்ட | மொத்தம் |
|---|---|---|---|
| சிங்களம் | 49372 | 4024 | 53396 |
| தமிழ் | 8238 | 936 | 9174 |
| ஆங்கிலம் | 1710 | 623 | 2333 |
| **மொத்தம்** | **59320** | **5583** | **64903** |

**அட்டவணை** 1

### 1.2.2 பரீட்சார்த்திகளினால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| தரம் | பாடசாலைப் பரீட்சார்த்திகள் | | தனிப்பட்ட பரீட்சார்த்திகள் | | மொத்தம் | சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | | |
| A | 5748 | 9.69 | 309 | 5.53 | 6057 | 9.33 |
| B | 5616 | 9.47 | 363 | 6.50 | 5979 | 9.21 |
| C | 11372 | 19.17 | 731 | 13.09 | 12103 | 18.65 |
| S | 16949 | 28.57 | 1242 | 22.25 | 18191 | 28.03 |
| F | 19635 | 33.10 | 2938 | 52.62 | 22573 | 34.78 |
| மொத்தம் | **59320** | **100.00** | **5583** | **100.00** | **64903** | **100.00** |

**அட்டவணை** 2

பரீட்சைக்குத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளில் ஏறக்குறைய 67% ஆனோர் கணக்கீடு பாடத்தில் சித்தியடைந்திருந்தாலும், தனிப்பட்ட பரீட்சார்த்திகளில் ஏறக்குறை 47% ஆனோர் மாத்திரமே இப்பாடத்தில் சித்தியடைந்துள்ளனர் என்பது மேலுள்ள அட்டவணையின் மூலம் எமக்குத் தெளிவாகின்றது. பொதுவாக விண்ணப்பதாரிகளில் ஏறக்குறைய 65% ஆனோர் மாத்திரமே கணக்கீடு பாடத்தில் சித்தியடைந்துள்ளனர்.

## 1.2.3 மாவட்ட அடிப்படையில் முதல் முறையாகத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| மாவட்டம் | | அதி சிறந்த சித்தி (A) பெற்றவர் | | விசேட திறமைச் சித்தி (B) பெற்றவர் | | திறமைச் சித்தி (C) பெற்றவர் | | சாதாரண சித்தி (S) பெற்றவர் | | சித்தி (A+B+C+S) பெற்றவர் | | சித்தி அடையாதோர் (F) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % |
| 1. கொழும்பு | 8292 | 1095 | 13.21 | 861 | 10.38 | 1758 | 21.20 | 2271 | 27.39 | 5985 | 72.18 | 2307 | 27.82 |
| 2. கம்பஹா | 5208 | 510 | 9.79 | 449 | 8.62 | 950 | 18.24 | 1431 | 27.48 | 3340 | 64.13 | 1868 | 35.87 |
| 3. களுத்துறை | 2482 | 300 | 12.09 | 237 | 9.55 | 455 | 18.33 | 665 | 26.79 | 1657 | 66.76 | 825 | 33.24 |
| 4. கண்டி | 2752 | 208 | 7.56 | 213 | 7.74 | 532 | 19.33 | 831 | 30.20 | 1784 | 64.83 | 968 | 35.17 |
| 5. மாத்தளை | 756 | 49 | 6.48 | 66 | 8.73 | 150 | 19.84 | 242 | 32.01 | 507 | 67.06 | 249 | 32.94 |
| 6. நுவரெலியா | 1074 | 74 | 6.89 | 100 | 9.31 | 194 | 18.06 | 287 | 26.72 | 655 | 60.99 | 419 | 39.01 |
| 7. காலி | 2391 | 307 | 12.84 | 212 | 8.87 | 439 | 18.36 | 622 | 26.01 | 1580 | 66.08 | 811 | 33.92 |
| 8. மாத்தறை | 1613 | 167 | 10.35 | 170 | 10.54 | 312 | 19.34 | 492 | 30.50 | 1141 | 70.74 | 472 | 29.26 |
| 9. அம்பாந்தோட்டை | 959 | 67 | 6.99 | 89 | 9.28 | 159 | 16.58 | 301 | 31.39 | 616 | 64.23 | 343 | 35.77 |
| 10. யாழ்ப்பாணம் | 1239 | 101 | 8.15 | 127 | 10.25 | 247 | 19.94 | 342 | 27.60 | 817 | 65.94 | 422 | 34.06 |
| 11. கிளிநொச்சி | 170 | 13 | 7.65 | 17 | 10.00 | 43 | 25.29 | 52 | 30.59 | 125 | 73.53 | 45 | 26.47 |
| 12. மன்னார் | 212 | 11 | 5.19 | 18 | 8.49 | 34 | 16.04 | 65 | 30.66 | 128 | 60.38 | 84 | 39.62 |
| 13. வவுனியா | 300 | 36 | 12.00 | 35 | 11.67 | 48 | 16.00 | 69 | 23.00 | 188 | 62.67 | 112 | 37.33 |
| 14. முல்லைத்தீவு | 155 | 6 | 3.87 | 18 | 11.61 | 30 | 19.35 | 42 | 27.10 | 96 | 61.94 | 59 | 38.06 |
| 15. மட்டக்களப்பு | 728 | 86 | 11.81 | 105 | 14.42 | 170 | 23.35 | 209 | 28.71 | 570 | 78.30 | 158 | 21.70 |
| 16. அம்பாறை | 969 | 83 | 8.57 | 100 | 10.32 | 204 | 21.05 | 310 | 31.99 | 697 | 71.93 | 272 | 28.07 |
| 17. திருகோணமலை | 558 | 48 | 8.60 | 41 | 7.35 | 106 | 19.00 | 157 | 28.14 | 352 | 63.08 | 206 | 36.92 |
| 18. குருநாகல் | 2524 | 200 | 7.92 | 183 | 7.25 | 459 | 18.19 | 756 | 29.95 | 1598 | 63.31 | 926 | 36.69 |
| 19. புத்தளம் | 1326 | 133 | 10.03 | 126 | 9.50 | 251 | 18.93 | 389 | 29.34 | 899 | 67.80 | 427 | 32.20 |
| 20. அனுராதபுரம் | 1157 | 87 | 7.52 | 79 | 6.83 | 226 | 19.53 | 335 | 28.95 | 727 | 62.83 | 430 | 37.17 |
| 21. பொலன்னறுவை | 581 | 51 | 8.78 | 28 | 4.82 | 110 | 18.93 | 178 | 30.64 | 367 | 63.17 | 214 | 36.83 |
| 22. பதுளை | 1409 | 98 | 6.96 | 73 | 5.18 | 241 | 17.10 | 386 | 27.40 | 798 | 56.64 | 611 | 43.36 |
| 23. மொனராகலை | 614 | 46 | 7.49 | 41 | 6.68 | 141 | 22.96 | 179 | 29.15 | 407 | 66.29 | 207 | 33.71 |
| 24. இரத்தினபுரி | 1986 | 270 | 13.60 | 220 | 11.08 | 390 | 19.64 | 515 | 25.93 | 1395 | 70.24 | 591 | 29.76 |
| 25. கேகாலை | 1266 | 143 | 11.30 | 119 | 9.40 | 252 | 19.91 | 337 | 26.62 | 851 | 67.22 | 415 | 32.78 |
| **நாடு முழுவதும்** | **40721** | **4189** | **10.29** | **3727** | **9.15** | **7901** | **19.40** | **11463** | **28.15** | **27280** | **66.99** | **13441** | **33.01** |

**அட்டவணை** 3

### 1.2.4 வகுப்பாயிடை அடிப்படையில் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்

| வகுப்பாயிடை | மீடிறன் | மீடிறன் சதவீதம் | திரள் மீடிறன் | திரள் மீடிறன் சதவீதம் |
|---|---|---|---|---|
| 91 - 100 | 284 | 0.44 | 64903 | 100.00 |
| 81 - 90 | 2358 | 3.63 | 64619 | 99.56 |
| 71 - 80 | 4907 | 7.56 | 62261 | 95.93 |
| 61 - 70 | 6723 | 10.36 | 57354 | 88.37 |
| 51 - 60 | 8692 | 13.39 | 50631 | 78.01 |
| 41 - 50 | 11140 | 17.16 | 41939 | 64.62 |
| 31 - 40 | 12769 | 19.67 | 30799 | 47.45 |
| 21 - 30 | 11348 | 17.48 | 18030 | 27.78 |
| 11 - 20 | 6010 | 9.26 | 6682 | 10.30 |
| 01 - 10 | 663 | 1.02 | 672 | 1.04 |
| 00 - 00 | 9 | 0.01 | 9 | 0.01 |

**அட்டவணை 4**

இப்பாடத்திற்கு பரீட்சார்த்திகள் புள்ளிகள் பெற்ற விதம் வகுப்பாயிடையின் அடிப்படையில் மேற்குறிப்பிட்ட அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது. உதாரணமாக மேற்குறிப்பிட்ட அட்டவணையின்படி இப்பாடத்திற்குத் தோற்றிய 64903 பேரில் 31-40 வகுப்பாயிடையில் புள்ளிகள் பெற்றவர்களின் எண்ணிக்கை 12769 ஆகும். அது விகிதமாக 19.67% ஆகும். 40 புள்ளி அல்லது அதனைவிடக் குறைவாகப் புள்ளிகள் பெற்றவர்களின் எண்ணிக்கை 30799 ஆகக் காணப்படுவதுடன் அதன் விகிதம் 47.45% ஆகும்.

## 1.3 பாட அடைவு பற்றிய பகுப்பாய்வு

### 1.3.1 வினாத்தாள் I இன் அடைவு




வரைபு 1 (RD/16/05/AL) படிவங்கள் மூலம் பெறப்பட்ட தகவல்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டுள்ளது.

பரீட்சார்த்திகளால் முதலாம் வினாத்தாளில் ஒவ்வொரு வினாக்களுக்கும் சரியான விடையளித்த விதம் மேற்குறிப்பிட்ட அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது.

மேற்குறிப்பிட்ட வரைபிற்கேற்ப பரீட்சார்த்திகளில் கூடுதலான தொகையினர் சரியாக விடையளித்துள்ள வினா 01 ஆக இருப்பதுடன், அதன் இலகுதன்மை 90% ஆகும். குறைந்த தொகையினர் சரியாக விடையளித்துள்ள வினா 07 மற்றும் 42 ஆம் வினாக்களாகும். அவற்றின் இலகுதன்மை 12% ஆகும்.

## 1.3.2 வினாத்தாள் II இல் வினாக்கள் தெரிவு செய்யப்பட்டுள்ள விதம்




இவ்வரைபிற்கேற்ப II ஆம் வினாத்தாளின் ஒவ்வொரு வினாக்களும் தெரிவு செய்யப்பட்டுள்ள முறை விளக்கப்பட்டுள்ளது. அதன்படி கட்டாய வினாக்களாகிய 1 ஆம் 2 ஆம் வினாக்களுக்கு மிகக்குறைந்த தொகையினர் தவிர ஏனைய சகல விண்ணப்பதாரிகளும் விடையளித்துள்ளனர் என்பது தெரிய வருகின்றது. ஏனைய வினாக்களில் விண்ணப்பதாரிகளுள் கூடுதலானோர் II ஆம் வினாத்தாளின் 3 ஆம் வினாவிற்கு விடையளித்துள்ளதுடன் அதன் அளவு ஏறக்குறைய 93% ஆகும். ஏனைய வினாக்களில் விண்ணப்பதாரிகளில் மிகக் குறைவானோர் தெரிவு செய்துள்ள வினா 07 ஆவது வினா என்பதுடன் அதன் இலகுதன்மை 53% ஆகும்.

**வரைபு 2** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

## 1.3.3 வினாத்தாள் II இல் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்




இவ்வரைபின் மூலம் II ஆவது வினாத்தாளின் ஒவ்வொரு வினாவிற்கும் புள்ளிகள் பெற்றுள்ள முறை விளக்கப்படுகின்றது. உதாரணமாக இங்கு 1 ஆம் வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 20 ஆகும். அப்புள்ளிகளில் 76%-100% (16-20 புள்ளிகள்) வகுப்பாயிடையில் புள்ளிகள் பெற்றுள்ள வீதம் ஏறக்குறைய 8% ஆகும். எனினும் விண்ணப்பதாரிகளில் கூடுதலானோர் அதாவது 39% ஆனோர் இவ்வினாவிற்கு 0%-25% (0-5 புள்ளிகள்) வகுப்பாயிடையிடைக்குரிய புள்ளிகளின் அளவையே பெற்றுள்ளனர்.

**வரைபு 3** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

### 1.3.4 வினாத்தாள் II இன் அடைவு




வரைபு 4 (RD/16/04/AL) படிவத்திலிருந்து பெற்ற தகவல்களின் உதவியுடன் தயாரிக்கப்பட்டுள்ளது.)

# பகுதி II

## 2 வினாக்களும் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்களும்

### 2.1 வினாத்தாள் I உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தொடர்பான விபரங்களும்

#### 2.1.1 வினாத்தாள் I இன் கட்டமைப்பு

* நேரம் 02 மணித்தியாலங்களாகும்.
* 30 பல்தேர்வு வினாக்களும், சுருக்க விடையளித்தல் வினாக்கள் 20 உம் காணப்படுகின்றன.
* சகல வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும்.
* ஒரு வினாவிற்கு 02 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 100 ஆகும்.
* விடைத்தாள் மதிப்பீட்டின் போது ஒவ்வொரு வினாவிற்கும் 4 புள்ளிகள் வீதம் வழங்கப்படும். அதற்கேற்ப மொத்தப்புள்ளிகள் 200 ஆகும்.
* பக்கம் 25 இல் இறுதிப் புள்ளி மதிப்பிடும் விதம் தொடர்பாக காட்டப்பட்டுள்ளது.

## 2.1.2 வினாத்தாள் I இன் வினா இல. 1 - 30 வரையான வினாக்கள்

**1.** பின்வரும் கூற்றுகளில் எது நிறுவனமொன்றின் கணக்கீட்டுத் தொழிற்பாட்டைச் **சிறப்பாக** விபரிக்கிறது ?
(1) இது நிறுவனத்தின் கொடுக்கல் வாங்கல்களையும் நிகழ்வுகளையும் பண அடிப்படையில் அளக்கிறது.
(2) இது நிறுவனத்தின் நிதித் தகவல்களை அதன் முகாமையாளர்களின் பயன்பாட்டிற்காகப் பகுத்தாராய்கிறது.
(3) இது நிறுவனத்தின் கொடுக்கல் வாங்கல்களையும் நிகழ்வுகளையும் கணக்குப் புத்தகங்களில் பதிவிடுகிறது.
(4) இது நிறுவனத்தின் தகவல்களை அது தொடர்பில் அக்கறையுடையோருக்கு தீர்மானம் எடுப்பதற்காக வழங்குகிறது.
(5) இது நிறுவனத்தின் வளங்களின் பயன்பாடு தொடர்பான தகவல்களை அதன் முகாமையாளர்களுக்கு வழங்குகிறது. (……)

**2.** வியாபாரமொன்றின் கடன்கொடுத்தோர் ஒருவரின் ரூ. 100 000 மீதியானது அதன் உரிமையாளரால் அவரின் சொந்தப் பணத்திலிருந்து கொடுத்துத் தீர்க்கப்பட்டது. இதன்போது கடன்கொடுத்தோர் ரூ. 10 000 கழிவினை அனுமதித்துள்ளார். இக் கொடுக்கல் வாங்கலினால் பொறுப்புக்கள், உரிமையாண்மை என்பவற்றில் ஏற்பட்ட தாக்கங்கள் கணக்கீட்டுச் சமன்பாட்டில் காட்டப்படுவது

| | பொறுப்புக்கள் | உரிமையாண்மை | |
|---|---|---|---|
| (1) | ரூ. 90 000 வினால் குறையும். | ரூ. 90 000 வினால் குறையும். | |
| (2) | ரூ. 90 000 வினால் குறையும். | ரூ. 90 000 வினால் அதிகரிக்கும். | |
| (3) | ரூ. 100 000 வினால் குறையும். | ரூ. 100 000 வினால் குறையும். | |
| (4) | ரூ. 100 000 வினால் குறையும். | ரூ. 100 000 வினால் அதிகரிக்கும். | |
| (5) | ரூ. 110 000 வினால் குறையும். | ரூ. 110 000 வினால் அதிகரிக்கும். | (……) |

**3.** கணக்கீட்டுச் செயன்முறையில் பின்வரும் செயற்பாடுகள் எந்த **சரியான** ஒழுங்குவரிசையில் நிகழ்கிறது ?
A - கொடுக்கல் வாங்கலை அது தொடர்புடைய ஆரம்ப பதிவேடுகளில் பதிதல்
B - வியாபாரக் கொடுக்கல் வாங்கல் இடம்பெறல்
C - கொடுக்கல் வாங்கலுக்கான மூல ஆவணத்தைத் தயாரித்தல்
D - கொடுக்கல் வாங்கலைப் பேரேட்டிற்கு மாற்றுதல்
(1) B, A, C, D (2) B, C, A, D (3) B, C, D, A (4) C, B, A, D (5) C, B, D, A (……)

**4.** பாதணிகளை உற்பத்திசெய்யும் வியாபார நிறுவனமொன்றின் பின்வரும் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்குப் பயன்படுத்தப்படும் ஆரம்பப் பதிவுப் புத்தகங்களின் ஒழுங்கு வரிசை எது ?
A - கடனுக்கு லொறி ஒன்றைக் கொள்வனவு செய்தல்
B - கடனுக்குத் தோற்பொருட்களைக் கொள்வனவு செய்தல்
C - வருடத்திற்கான வருமானவரி ஏற்பாடு
D - கொள்வனவு செய்த தோற்பொருட்களின் ஒரு பகுதியை விநியோகத்தர்களுக்குத் திருப்பியனுப்புதல்
(1) பொது நாளேடு, கொள்வனவு நாளேடு, பொது நாளேடு, கொள்வனவு நாளேடு
(2) பொது நாளேடு, கொள்வனவு நாளேடு, பொது நாளேடு, கொள்வனவுத் திரும்பல் நாளேடு
(3) பொது நாளேடு, கொள்வனவு நாளேடு, காசேடு, கொள்வனவுத் திரும்பல் நாளேடு
(4) கொள்வுனவு நாளேடு, கொள்வுனவு நாளேடு, பொது நாளேடு, கொள்வனவு நாளேடு
(5) கொள்வனவு நாளேடு, கொள்வனவு நாளேடு, பொது நாளேடு, கொள்வனவுத் திரும்பல் நாளேடு (……)

**5.** பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருக்களில் எது நிதிக் கூற்றுகளில் கடன்பட்டோர் மற்றும் கடன்கொடுத்தோரை இனங்காண்பதற்கான அடிப்படையினை வழங்குகிறது ?
(1) அட்டுறு (2) தொழில் முழுமைக்கூறு (3) கணக்கீட்டுக் காலம்
(4) இணைத்தல் (5) தேறல் (……)

**6.** பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருக்களில் எது சொத்துக்கள், பொறுப்புக்கள் என்பவற்றை நடைமுறை மற்றும் நடைமுறையல்லாச் சொத்துகளாக வகைப்படுத்தலுக்கான அடிப்படையினை வழங்குகிறது ?
(1) அட்டுறு (2) மாறாத்தன்மை (3) தொடர்ந்து இயங்குதல்
(4) கணக்கீட்டுக் காலம் (5) தேறல் (……)

**7.** பின்வருவனவற்றுள் எவை நிதிக் கணக்கீட்டுக்கான எண்ணக்கரு சட்டகத்தின்படி சொத்தொன்றின் குணாதிசயங்களாகும் ?
A - இது நிறுவனமொன்றினால் கட்டுப்படுத்தப்படும் ஒரு மூலவளமாகும்.
B - இதனூடாக அதன் எதிர்கால பொருளாதார நன்மைகள் அந்நிறுவனத்துள் வந்துசேரும் என எதிர்பார்க்கப்படுகிறது.
C - இதன் கிரயம் அல்லது பெறுமதியை நம்பகரமாக அளவிட முடியும்.
(1) B மாத்திரம். (2) A, B ஆகியன மாத்திரம். (3) A, C ஆகியன மாத்திரம்.
(4) B, C ஆகியன மாத்திரம். (5) A, B, C ஆகியன எல்லாம். (……)

**8.** வரையறுத்த ரமேஷ் பொதுக்கம்பனியின் 31.03.2014 இல் உள்ளவாறான பரீட்சைமீதி சமப்படவில்லை. இந்த வித்தியாசம் தொங்கல் கணக்கிற்கு மாற்றப்பட்டது. அதனைத் தொடர்ந்து மேற்கொண்ட ஆய்வின்போது பின்வருவன வெளிக்கொணரப்பட்டன:

- சம்பளமாகக் கொடுத்த ரூ. 100 000 காசுப் புத்தகத்தில் மட்டும் பதியப்பட்டிருந்தது.
- கடன்கொடுத்தோருக்குக் கொடுத்த ரூ. 25 000 கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் காசு பெறுவனவாகப் பதியப்பட்டிருந்தது.
- விற்பனை நாளேடு ரூ. 30 000 இனால் குறைத்துக் கூட்டப்பட்டிருந்தது.
- பதிவழிக்கப்பட்ட ரூ. 20 000 அறவிடமுடியாக் கடனானது வருமானமாகப் பதியப்பட்டிருந்தது.

மேற்படி பிழைகளைத் திருத்துவதற்கு முன்னரான தொங்கல் கணக்கு மீதி:

(1) ரூ. 145 000 வரவு (2) ரூ. 145 000 செலவு (3) ரூ. 190 000 வரவு
(4) ரூ. 190 000 செலவு (5) ரூ. 220 000 செலவு (……)

**9.** வரையறுத்த அம்மு பொதுக்கம்பனியின் 31.03.2014 இல் உள்ளபடி கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதி ரூ. 460 000 ஆகவும் கடன்பட்டோர் பேரேட்டின்படியான கடன்பட்டோர் மீதிகளின் மொத்தம் ரூ. 450 000 ஆகவும் காணப்பட்டன. அதனைத் தொடர்ந்து மேற்கொண்ட ஆய்வின்போது பின்வருவன வெளிக்கொணரப்பட்டன.

- அறவிடமுடியாக் கடனாகப் பதிவழிக்கப்பட்ட ரூ. 10 000 கடன்பட்டோர் மீதியொன்று கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கிற்கு மாற்றப்பட்டிருக்கவில்லை.
- விற்பனைப் பட்டியலொன்றின் ரூ. 21 000 விற்பனை நாளேட்டில் ரூ. 12 000 எனப் பதியப்பட்டிருந்தது.
- கடன்பட்டவரொருவர் நேரடியாக வங்கிக்குச் செலுத்திய ரூ. 31 000 கடன்பட்டோர் பேரேடு மற்றும் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு ஆகிய இரண்டிலும் பதியப்பட்டிருக்கவில்லை.

31.03.2014 இல் உள்ளவாறான கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் **சரியான** மீதி:

(1) ரூ. 410 000 (2) ரூ. 428 000 (3) ரூ. 448 000 (4) ரூ. 459 000 (5) ரூ. 490 000 (……)

**10.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றின் 2014 ஏப்ரல் மாதத்துடன் தொடர்பானவை.

| **கொள்வனவுகள்** | **பட்டியல் விலை (ரூ.)** | **வியாபாரக் கழிவு (%)** | **காசுக் கழிவு (%)** |
|---|---|---|---|
| கடனுக்கு | 400 000 | 5 | 5 |
| காசுக்கு | 200 000 | 10 | - |

கொள்வனவு செய்த திகதியிலிருந்து 15 நாட்களுக்கிடையில் கொடுப்பனவுகள் தீர்க்கப்பட்டால் மாத்திரம் விநியோகத்தர்களால் காசுக் கழிவு அனுமதிக்கப்படுகிறது. கம்பனியினால் இக்காலப்பகுதிக்குள் கொடுக்க வேண்டியதில் 50% தொகையை மாத்திரமே கொடுத்துத் தீர்க்க முடிந்துள்ளது.

ஏப்ரல் 2014 காலத்தில் கம்பனியினால் பெற்றுக்கொள்ளப்பட்ட கழிவினைப் பதிவதற்கான நாட்குறிப்புப் பதிவிற்குரிய **சரியான** தொகைகள்:

| | **கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு வரவு (ரூ.)** | **பெற்ற கழிவுக் கணக்கு செலவு (ரூ.)** |
|---|---|---|
| (1) | 9 500 | 9 500 |
| (2) | 10 000 | 10 000 |
| (3) | 29 500 | 29 500 |
| (4) | 30 000 | 30 000 |
| (5) | 39 500 | 39 500 |

(……)

**11.** பின்வருவன கம்பனியொன்றின் உற்பத்திப்பொருளின் 2014 மார்ச் மாதத்திற்கான தகவல்கள் ஆகும்.

| **திகதி** | **விபரம்** | **அலகுகள்** | **அலகுக் கிரயம் (ரூ.)** |
|---|---|---|---|
| 01.03.2014 | சரக்கிருப்பு | 3 000 | 80 |
| 10.03.2014 | கொள்வனவுகள் | 5 000 | 90 |
| 15.03.2014 | திரும்பல்கள் (10.03.2014 இல் கொள்வனவு செய்த பொருட்களிலிருந்து) | 1 000 | ? |
| 20.03.2014 | கொள்வனவுகள் | 3 000 | 70 |
| 22.03.2014 | விற்பனைகள் | ? | ? |
| 31.03.2014 | சரக்கிருப்பு | 4 000 | ? |

கம்பனியானது சரக்கிருப்பு வழங்கலை விலையிடுவதற்கு 'முதல் வந்தது - முதல் சென்றது' (FIFO) முறையினைப் பயன்படுத்துகிறது.

31.03.2014 இல் முடிவடைந்த மாதத்திற்கான விற்பனைக் கிரயம் மற்றும் 31.03.2014 இல் உள்ளவாறான சரக்கிருப்பின் பெறுமதி என்பன:

| | **விற்பனைக் கிரயம் (ரூ.)** | **சரக்கிருப்பு (ரூ.)** |
|---|---|---|
| (1) | 420 000 | 300 000 |
| (2) | 480 000 | 330 000 |
| (3) | 480 000 | 320 000 |
| (4) | 510 000 | 300 000 |
| (5) | 540 000 | 360 000 |

(……)

**2.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றினால் 01.03.2014 இல் கொள்வனவு செய்யப்பட்ட இயந்திரமொன்றுடன் தொடர்பானவை. இக்கம்பனி பெறுமதி சேர் வரிக்காகப் (VAT) பதியப்பட்டுள்ளது.

| | ரூ. |
|---|---|
| இயந்திரத்தின் பட்டியல் விலை | 800 000 |
| பெறுமதி சேர் வரி செலுத்தியது | 86 400 |
| போக்குவரத்துக் கிரயம் | 30 000 |
| அமைவிடம் தயாரித்தல் கிரயம் | 20 000 |
| நிர்மாணிப்புக் கிரயம் | 40 000 |
| ஆரம்ப பரிசோதனைக் கிரயம் | 50 000 |

கொள்வனவின்போது 10% வியாபாரக் கழிவு பெறப்பட்டது. ஆரம்ப பரிசோதனையின்போது உற்பத்திசெய்யப்பட்ட 10 அலகுகள் அலகொன்று ரூ. 300 ஆக விற்பனை செய்யப்பட்டது.

LKAS 16 (ஆதனம், பொறி மற்றும் உபகரணம்) இன்படி ஆரம்ப இனங்காணலில் இயந்திரத்தின் கிரயம்:

(1) ரூ. 830 000 (2) ரூ. 860 000 (3) ரூ. 896 400 (4) ரூ. 910 000 (5) ரூ. 916 400 (……)

**13.** வியாபாரமொன்றின் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்துக்கான வரைபு வருமானக் கூற்றின்படி மொத்த இலாபம் மற்றும் தேறிய இலாபம் என்பன முறையே ரூ. 840 000, ரூ. 260 000 ஆகும். அதனைத் தொடர்ந்து 01.04.2013 இல் உள்ளவாறான சரக்கிருப்புகள் ரூ. 20 000 ஆல் குறைத்து மதிப்பிடப்பட்டுள்ளதாகவும் 31.03.2014 இல் உள்ளவாறான சரக்கிருப்புகள் ரூ. 30 000 ஆல் கூட்டி மதிப்பிடப்பட்டுள்ளதாகவும், மேலும் நிறுவன உரிமையாளருக்குச் சொந்தமான கட்டடத்தை நிறுவன நோக்கத்திற்குப் பயன்படுத்தியமைக்காக நிறுவனத்தினால் உரிமையாளருக்குச் செலுத்தப்பட்ட வாடகை ரூ. 60 000 பதிவிடப்பட்டிருக்கவில்லை எனவும் தெரியவந்துள்ளது.

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்துக்கான **சரியான** மொத்த இலாபம், தேறிய இலாபம் என்பன:

| | **மொத்த இலாபம் (ரூ.)** | **தேறிய இலாபம் (ரூ.)** |
|---|---|---|
| (1) | 730 000 | 200 000 |
| (2) | 790 000 | 150 000 |
| (3) | 830 000 | 190 000 |
| (4) | 850 000 | 210 000 |
| (5) | 890 000 | 250 000 |

(……)

**14.** பின்வரும் தகவல்கள் நிறுவனமொன்றிற்குச் சொந்தமான மோட்டார் வாகனங்கள் தொடர்பானவை.

| | ரூ. '000 |
|---|---|
| 01.04.2013 இல் மோட்டார் வாகனங்கள் - கிரயத்தில் | 4 000 |
| 01.04.2013 இல் திரண்ட பெறுமானத்தேய்வு | 750 |
| 01.10.2013 இல் மோட்டார் வாகனமொன்றை விற்றுப் பெற்றவை (இது 01.04.2011 இல் ரூ. 1 500 000 கிரயத்தில் கொள்வனவு செய்யப்பட்டது.) | 1 000 |
| 01.01.2014 இல் மோட்டார் வாகனமொன்றின் கொள்வனவு | 5 000 |

மோட்டார் வாகனங்கள் வருடாந்தம் கிரயத்தில் 10% நேர்கோட்டு முறையில் பெறுமானத்தேய்விடப்படுவதுடன் இவை கொள்வனவு செய்யப்பட்ட தினத்திலிருந்து பாவனைக்குக் கிடைப்பனவாக உள்ளன.

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான மோட்டார் வாகனங்களுக்கான பெறுமானத்தேய்வு, மோட்டார் வாகன விற்பனை நட்டம் என்பன பின்வருவனவற்றுள் எவை ?

| | பெறுமானத்தேய்வு (ரூ.) | நட்டம் (ரூ.) |
|---|---|---|
| (1) | 375 000 | 200 000 |
| (2) | 400 000 | 350 000 |
| (3) | 450 000 | 125 000 |
| (4) | 525 000 | 500 000 |
| (5) | 900 000 | 50 000 |

(……)

**15.** விளையாட்டுச் சங்கமொன்று 30 அங்கத்தவர்களுடன் 01.04.2013 இல் ஆரம்பிக்கப்பட்டது. இவர்களுள் 10 பேர் ஆயுள் அங்கத்தவர்களாவர். அங்கத்தவர் ஒருவருக்கான வருடாந்த சந்தாக் கட்டணம் ரூ. 5 000 ஆகும். ஆயுள் அங்கத்தவராவதற்கு 10 வருடத்திற்கான சந்தாப் பணத்தை ஒரே தடவையில் காசாகச் செலுத்துதல் வேண்டும். ஆயுள் அங்கத்துவக் கட்டணம் அனுமதிக்கப்பட்ட வருடத்திலிருந்து 10 வருட காலத்திற்கு சமமான தொகை வருமானமென இனங்காணப்படும். ஏனைய 20 அங்கத்தவர்களில் 5 பேர் ஆறு மாதங்களுக்கும் 8 பேர் ஒரு வருடத்திற்கும் மிகுதியாகவுள்ளோர் இரண்டு வருடங்களுக்கும் சந்தாப் பணத்தைச் செலுத்தியுள்ளனர்.

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான சந்தா வருமானம் மற்றும் காசாகப் பெற்ற சந்தா என்பன:

| | சந்தா வருமானம் (ரூ.) | காசாகப் பெற்ற சந்தா (ரூ.) |
|---|---|---|
| (1) | 100 000 | 110 000 |
| (2) | 100 000 | 122 500 |
| (3) | 150 000 | 610 000 |
| (4) | 150 000 | 622 500 |
| (5) | 600 000 | 622 500 |

(……)

**16.** பின்வரும் கூற்றுகளில் 1890 பங்குடைமை நிலையியற் கட்டளையின் 24 ஆம் சரத்தில் உள்ளடங்கியிருப்பவை எவை ?

A - பங்காளர்களுக்கிடையில் இலாப நட்டங்கள் சமமாகப் பகிரப்பட வேண்டும்.
B - பங்காளர்கள் அவர்களின் மூலதன மீதிகளுக்கான வட்டிக்கு உரித்துடையோர் ஆவர்.
C - பங்காளர்கள் சம்பளங்களுக்கு உரித்துடையவர்கள் அல்லர்.
D - இளைப்பாறிய பங்காளரின் தீர்க்கப்படாத மீதிக்கு வட்டி செலுத்தப்படலாம்.

(1) A, C ஆகியன மாத்திரம். (2) B, D ஆகியன மாத்திரம். (3) A, B, C ஆகியன மாத்திரம்.
(4) A, C, D ஆகியன மாத்திரம். (5) B, C, D ஆகியன மாத்திரம். (……)

**17.** பங்குடைமையின் கணக்குகள் தயாரிப்பது தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது **பிழையானது** ?

(1) பங்குடைமை ஒப்பந்தத்தின்படி இலாப நட்டங்கள் பங்காளரிடையே பகிரப்படும்.
(2) பங்குடைமையின் உரிமைத்துவம் மாறும்போது நன்மதிப்பானது மதிப்பிடப்பட்டு சீராக்கப்படும்.
(3) பங்குடைமை ஒப்பந்தத்தில் சம்பளத்திற்கான ஏற்பாடு காணப்படுமாயின் பங்காளருக்கு சம்பளங்கள் வழங்கப்படும்.
(4) பங்காளரின் பற்றுகள் பங்குடைமையின் இலாப நட்டப் பகிர்வின்போது கழிக்கப்படுவதில்லை.
(5) பங்குடைமைக்குப் பங்காளரால் கொடுக்கப்படும் கடனுக்கான வட்டியானது வியாபாரமொன்றின் ஒரு செலவாக இனங்காணப்படுவதில்லை. (……)

**18.** கம்பனியொன்றின் கணக்காண்டு 31.03.2014 இல் முடிவடைந்தது. இயக்குனர்கள் நிதிக் கூற்றுகளை வழங்குவதற்கு 30.06.2014 இல் அதிகாரமளித்திருந்தனர். கம்பனியின் வருடாந்த பொதுக்கூட்டம் 15.07.2014 இல் இடம்பெற்றது. கம்பனி தொடர்பான பின்வரும் நிகழ்வுகள் 31.03.2014 இற்குப் பின்னர் இடம்பெற்றுள்ளன.

A - 31.03.2014 இல் உள்ளவாறான ரூ. 500 000 மீதியுடைய கடன்பட்டோர் ஒருவர் 30.04.2014 இல் முறிவடைந்தவராகப் பிரகடனப்படுத்தப்பட்டார்.

B - 31.03.2014 இல் ரூ. 800 000 மீதியுடைய கடன்பட்டோர் ஒருவர் 10.07.2014 இல் முறிவடைந்தவராகப் பிரகடனப்படுத்தப்பட்டார்.

C - 31.03.2014 இல் உள்ளவாறான ரூ. 600 000 கிரயத்தில் மதிப்பிடப்பட்ட சரக்கிருப்பானது 10.04.2014 இல் ரூ. 550 000 இற்கு விற்கப்பட்டது.

D - முதலீடுகளின் சந்தைப் பெறுமதியானது 30.04.2014 இலிருந்து 30.06.2014 வரையிலான காலப்பகுதியில் ரூ. 300 000 இனால் குறைவடைந்தது.

மேற்படி நிகழ்வுகளில் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுகளில் சீராக்கம் செய்யப்பட வேண்டியவை எவை ?

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம். (3) B, C ஆகியன மாத்திரம்.
(4) A, C, D ஆகியன மாத்திரம். (5) B, C, D ஆகியன மாத்திரம். (……)

**19.** கம்பனி ஒன்றுடன் தொடர்பான 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளன.

| | ரூ. |
|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 800 000 |
| வருடத்திற்கான பெறுமானத்தேய்வு | 100 000 |
| சரக்கிருப்பில் அதிகரிப்பு | 120 000 |
| கடன்பட்டோரில் குறைவு | 200 000 |
| கடன்கொடுத்தோரில் அதிகரிப்பு | 180 000 |

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியின் செயற்பாட்டு நடவடிக்கையிலிருந்தான தேறிய காசுப் பாய்ச்சல் எவ்வளவு ?

(1) ரூ. 640 000 (2) ரூ. 800 000 (3) ரூ. 900 000 (4) ரூ. 960 000 (5) ரூ. 1 160 000 (……)

**20.** பின்வரும் கூற்றுகளில் எவை கம்பனி ஒன்றின் 'மொத்த முற்றும் அடங்கிய வருமானம்' (Total Comprehensive Income) தொடர்பில் **சரியானது** ?

A - இது வருடத்திற்கான இலாபம், ஏனைய முற்றும் அடங்கிய வருமானம் ஆகிய இரண்டினதும் மொத்தமாகும்.

B - இது குறித்தவொரு காலப்பகுதியினுள் இனம் காணப்பட்ட எல்லா வருமானங்களுக்கும் செலவுகளுக்கும் இடையிலான வேறுபாடு ஆகும்.

C - இது குறித்தவொரு காலப்பகுதியினுள் இனம் காணப்பட்ட எல்லாச் செயற்பாட்டு வருமானங்களுக்கும் மொத்தச் செலவுகளுக்கும் இடையிலான வேறுபாடு ஆகும்.

D - இது குறித்தவொரு காலப்பகுதியினுள் உரிமையாளர்களால், உரிமையாளர்கள் என்ற அடிப்படையில் மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகள் நீங்கலாக ஏனைய கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகளால் உரிமையாண்மையில் ஏற்படும் மாற்றம் ஆகும்.

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம். (3) B, D ஆகியன மாத்திரம்.
(4) C, D ஆகியன மாத்திரம். (5) A, B, D ஆகியன மாத்திரம். (……)

**21.** கம்பனியொன்றின் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான ஆதனம், பொறி மற்றும் உபகரணம் தொடர்பான தகவல்கள் பின்வருமாறு:

| | ரூ. |
|---|---|
| ஆதனம், பொறி, உபகரணத்தின் மீதான பெறுமானத்தேய்வு | 500 000 |
| கட்டடங்கள் மீள் மதிப்பின் மீதான குறைவு | 150 000 |
| மோட்டார் வாகனமொன்றின் விற்பனை மீதான இலாபம் | 50 000 |

31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் கட்டடங்களின் மீள் மதிப்பீட்டினால் உருவாகிய மிகை ரூ. 100 000 ஆகும். மேற்படி கொடுக்கல், வாங்கல் மற்றும் நிகழ்வுகளின் காரணமாக 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியின் இலாபத்திலும் மொத்த முற்றுமடங்கிய வருமானத்திலும் ஏற்பட்ட **தேறிய குறைவு** எவ்வளவு ?

| | **இலாபத்தில் தேறிய குறைவு (ரூ.)** | **மொத்த முற்றுமடங்கிய வருமானத்தில் தேறிய குறைவு (ரூ.)** |
|---|---|---|
| (1) | 450 000 | 150 000 |
| (2) | 500 000 | 100 000 |
| (3) | 500 000 | 600 000 |
| (4) | 600 000 | 500 000 |
| (5) | 600 000 | 600 000 |

(……)

**22.** கம்பனியொன்றில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகள் என்பன 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்தில் இடம்பெற்றுள்ளன.

A - நிறுத்திவைத்த வருவாய்களை மூலதனமாக்கி ரூ. 500 000 பெறுமதியான சாதாரண பங்குகள் வழங்கப்பட்டன.

B - கட்டடங்கள் ரூ. 120 000 இனை மிகையாகப் பெறும்வகையில் மீள் மதிப்பீடு செய்யப்பட்டன.

C - நிலையான வைப்பொன்றிலிருந்து ரூ. 80 000 வட்டி ஈட்டப்பட்டது.

D - சாதாரண பங்குதாரர்களுக்கு ரூ. 140 000 இடைக்காலப் பங்கிலாபமாகச் செலுத்தப்பட்டது.

மேற்படி கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகளினால் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியின் உரிமையாண்மையில் ஏற்பட்ட **'தேறிய அதிகரிப்பு'** எவ்வளவு ?

(1) ரூ. 60 000 (2) ரூ. 200 000 (3) ரூ. 360 000 (4) ரூ. 500 000 (5) ரூ. 560 000 (……)

- **கம்பனியொன்றுடன் தொடர்பான பின்வரும் தகவல்களை 23ஆம் 24ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்காகப் பயன்படுத்துக.**

| | **31.03.2014 இல் உள்ளபடி (ரூ.)** | **31.03.2013 இல் உள்ளபடி (ரூ.)** |
|---|---|---|
| மொத்தச் சொத்துக்கள் | 2 200 000 | 1 800 000 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 500 000 | 500 000 |
| நிறுத்திவைத்த வருவாய்கள் | 700 000 | 300 000 |

**31.03.2014 இல் முடிவடைந்த வருடத்தில் :**

| | ரூ. |
|---|---|
| சாதாரண பங்குதாரர்களுக்குச் செலுத்திய இடைக்காலப் பங்கிலாபம் | 100 000 |
| வங்கிக் கடன்களுக்கான வட்டி | 125 000 |
| வருடத்திற்கான வருமானவரி | 75 000 |

**23.** 31.03.2014 இல் உள்ளவாறு கம்பனியின் உரிமையாண்மை மீதான திரும்பலைக் கணிக்கும்போது பயன்படுத்தப்படும் இலாபம்:

(1) ரூ. 300 000 (2) ரூ. 400 000 (3) ரூ. 500 000 (4) ரூ. 600 000 (5) ரூ. 700 000 (……)

**24.** கம்பனியின் மொத்தச் சொத்துகள் மீதான திரும்பல் விகிதம் (சராசரி மொத்த சொத்துகள் அடிப்படையில்):

(1) 15% (2) 20% (3) 25% (4) 30% (5) 35% (……)

**25.** உற்பத்தி நிறுவனமொன்றின் பின்வரும் கிரயங்களில் எவற்றை நேர்க் கிரயங்களாக வகைப்படுத்தலாம் ?

A - உற்பத்தி செய்யப்பட்ட அலகுகளின் எண்ணிக்கை அடிப்படையில் ஊழியர்களுக்குச் செலுத்தப்பட்ட கூலி

B - தொழிற்சாலை முகாமையாளருக்குச் செலுத்திய மாதாந்த சம்பளம்

C - மூலப்பொருள்களைத் தொழிற்சாலைக்குக் கொண்டுவருவதில் ஏற்பட்ட போக்குவரத்துச் செலவு

D - தொழிற்சாலையில் பயன்படுத்தப்படும் இயந்திரத்திற்கான பெறுமானத்தேய்வு

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம். (3) B, C ஆகியன மாத்திரம்.
(4) A, B, D ஆகியன மாத்திரம். (5) A, C, D ஆகியன எல்லாம். (……)

**26.** கம்பனியொன்றின் ஒரே காலப்பகுதிக்கான பாதீட்டு உற்பத்தி மேந்தலைகள் இரண்டு செயற்பாட்டு மட்டங்களில் பின்வருமாறு தரப்பட்டுள்ளன.

| **செயற்பாட்டு மட்டம் (அலகுகள்)** | **பாதீட்டு உற்பத்தி மேந்தலைகள் (ரூ.)** |
|---|---|
| 30 000 | 225 000 |
| 40 000 | 275 000 |

அலகொன்றின் மூலக் கிரயம் ரூ. 10 என மதிப்பிடப்பட்டுள்ளது.

40 000 அலகுகள் கொண்ட செயற்பாட்டு மட்டத்தில் மொத்த மாறும் உற்பத்தி மேந்தலைகள் மற்றும் மொத்த உற்பத்திக் கிரயம் என்பன:

| | **மொத்த மாறும் உற்பத்தி மேந்தலைகள் (ரூ.)** | **மொத்த உற்பத்திக் கிரயம் (ரூ.)** |
|---|---|---|
| (1) | 50 000 | 525 000 |
| (2) | 50 000 | 675 000 |
| (3) | 200 000 | 675 000 |
| (4) | 200 000 | 825 000 |
| (5) | 275 000 | 675 000 |

(……)

**27.** பின்வரும் தகவல்கள் வருடமொன்றில் உற்பத்திக் கம்பனியொன்றினால் பயன்படுத்தப்பட்ட மூலப்பொருள் 'A' தொடர்பானவை.

| | **ஆகக் குறைந்தது** | **ஆகக் கூடியது** |
|---|---|---|
| பாவனை (அலகுகள்) | 2 000 | 5 000 |
| விநியோகக் காலம் (மாதங்கள்) | 4 | 6 |

ஆகக் கூடிய சரக்கிருப்பு மட்டம் 42 000 அலகுகள் ஆகும்.

இம்மூலப்பொருளின் மறுகட்டளை மட்டம், மறுகட்டளைத் தொகை என்பன:

| | **மறுகட்டளை மட்டம் (அலகுகள்)** | **மறுகட்டளைத் தொகை (அலகுகள்)** |
|---|---|---|
| (1) | 17 500 | 32 500 |
| (2) | 20 000 | 30 000 |
| (3) | 20 000 | 39 500 |
| (4) | 30 000 | 20 000 |
| (5) | 30 000 | 29 500 |

(……)

**28.** கம்பனியொன்றின் தொழிற்சாலை ஊழியர்களுக்கு அலகொன்றுக்கு ரூ. 10 வீதம் கூலி செலுத்தப்படுகிறது. 8 மணித்தியாலங்களைக் கொண்ட வேலை நாளொன்றில் ஒவ்வொரு 30 நிமிடங்களுக்கும் 10 அலகுகள் உற்பத்தி செய்யப்பட வேண்டும். எதிர்பார்க்கப்படும் தொகையை விட மேலதிகமாக உற்பத்தி செய்யப்படும் அலகுகளுக்கு அலகொன்றுக்கு ரூ. 15 வீதம் செலுத்தப்படும். குறிப்பிட்ட நாளொன்றில் மூன்று ஊழியர்களான அமலன், விமலன், கமலன் ஆகியோர் முறையே 160, 200, 150 அலகுகளை உற்பத்தி செய்திருப்பின் அவர்களின் மொத்தக் கூலிகள்:

| | **அமலன் (ரூ.)** | **விமலன் (ரூ.)** | **கமலன் (ரூ.)** |
|---|---|---|---|
| (1) | 1 600 | 2 200 | 1 350 |
| (2) | 1 600 | 2 200 | 1 500 |
| (3) | 1 600 | 2 200 | 1 600 |
| (4) | 1 600 | 3 000 | 1 500 |
| (5) | 1 600 | 3 000 | 1 600 |

(……)

**29.** அலகொன்றுக்கான விற்பனை விலை, அலகொன்றுக்கான மாறும் கிரயம் ஆகிய இரண்டும் 15% ஆல் குறைவடையும்போது நிலையான கிரயம் மாறாது இருக்குமாயின் அலகிற்கான பங்களிப்பு மற்றும் பங்களிப்பு - விற்பனை விகிதம் ஆகியவற்றில் ஏற்படும் தாக்கம்:

| | **அலகிற்கான பங்களிப்பு** | **பங்களிப்பு - விற்பனை விகிதம்** |
|---|---|---|
| (1) | குறையும். | மாற்றமில்லை. |
| (2) | குறையும். | குறையும். |
| (3) | குறையும். | அதிகரிக்கும். |
| (4) | மாற்றமில்லை. | மாற்றமில்லை. |
| (5) | மாற்றமில்லை. | குறையும். |

(……)

**30.** பின்வருவனவற்றுள் எவை ஏனைய காரணிகள் மாறாத நிலையில் செயற்றிட்டமொன்றின் தேறிய நிகழ்கால பெறுமதியில் **அதிகரிப்பை** ஏற்படுத்தும் ?

A - கழிவீட்டு வீதத்தில் குறைவு
B - வருடாந்த பெறுமானத்தேய்வில் குறைவு
C - ஆரம்ப முதலீட்டில் குறைவு
D - தேறிய செயற்பாட்டு காசுப் உட்பாய்ச்சலில் குறைவு

(1) A, C ஆகியன மாத்திரம். (2) C, D ஆகியன மாத்திரம். (3) A, C, D ஆகியன மாத்திரம்.
(4) B, C, D ஆகியன மாத்திரம். (5) A, B, C, D ஆகியன எல்லாம். (……)

**2.1.3** வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்

| வினா இலக்கம் | விடை | வினா இலக்கம் | விடை |
|---|---|---|---|
| 01. | 4 | 16. | 1 |
| 02. | 4 | 17. | 5 |
| 03. | 2 | 18. | 2 |
| 04. | 2 | 19. | 5 |
| 05. | 1 | 20. | 5 |
| 06. | 3 | 21. | 3 |
| 07. | 2 | 22. | 1 |
| 08. | 3 | 23. | 3 |
| 09. | 2 | 24. | 5 |
| 10. | 1 | 25. | 2 |
| 11. | 4 | 26. | 3 |
| 12. | 1 | 27. | 4 |
| 13. | 2 | 28. | 2 |
| 14. | 3 | 29. | 1 |
| 15. | 4 | 30. | 1 |

**சரியான ஒரு விடைக்கு 04 புள்ளி வீதம் மொத்தம் 120 புள்ளிகள்**

## 2.1.4 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்

- **31 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்களுக்கான சுருக்கமான விடைகளைப் புள்ளிக்கோடுகளில் எழுதுக.**

**31.** கீழே தரப்பட்டுள்ள அம்சங்கள் தொடர்பில் நிதி, முகாமைக் கணக்கீட்டு அறிக்கைகளுக்கிடையிலான வேறுபாடுகளைக் குறிப்பிடுக.

| **அம்சங்கள்** | **அறிக்கைகள்:** **நிதிக் கணக்கீடு** | **முகாமைக் கணக்கீடு** |
|---|---|---|
| A - அறிக்கைகளைப் பயன்படுத்துவோர் | ………………………………… | ……………………………… |
| B - தயாரிக்கும் தடவைகள் | ……………………………….. | ……………………………… |
| C - சட்டத் தேவைகள் | ………………………………… | ……………………………… |
| D - அறிக்கையிடப்படும் தகவல்களின் தன்மை | ………………………………… | ……………………………… |

**விடை**

| 31. | நிதிக் கணக்கீடு | முகாமைக் கணக்கீடு | |
|---|---|---|---|
| A | அக்கறை உடைய தரப்பினர் / வெளியக உள்ளக தரப்பினர் (Stakeholders) | முகாமையாளர் / உட்கட்சியினர் | (01) |
| B | ஒரு வருடம் | தேவைக்கேற்ப / அவசியம் ஏற்படும்போது | (01) |
| C | சட்ட பூர்வமான தன்மையானது / அவசியமானது | சட்டபூர்வ தன்மை அற்றது / அவசியமற்றது | (01) |
| D | வரலாற்றுக்கிரய தகவல்கள் / கடந்தகாலத் தகவல்கள் | நிகழ்கால, எதிர்காலத் தகவல்கள் | (01) |

**32.** பின்வரும் கூற்றுகளில் எது **சரி** எது **பிழை** என்பதைப் பொருத்தமான நிரலில் '√' அடையாளமிடுவதன் மூலம் காட்டுக.

| **கூற்று** | **சரி** | **பிழை** |
|---|---|---|
| A - கடன்பட்டோர் ஒருவரிடமிருந்து பெறும் காசுப் பெறுவனவுகளினால் உரிமையாண்மை அதிகரிக்கிறது. | ………… | …………… |
| B - கடனொன்றிற்கான வட்டிக் கொடுப்பனவினால் உரிமையாண்மை குறைவடைகிறது. | ………… | …………… |
| C - சாதாரண பங்குதாரர்களுக்குப் பங்கிலாபம் செலுத்தும்போது வருடத்திற்கான இலாபம் குறைவடைகிறது. | ………… | …………… |
| D - வருடமொன்றில் இலாபம் ஈட்டப்படும்போது வருட முடிவிலுள்ள காசு மீதியானது எப்போதும் அதிகரிக்கிறது. | ………… | …………… |

**விடை**

| 32. | சரி | பிழை | |
|---|---|---|---|
| A | | √ | (01) |
| B | √ | | (01) |
| C | | √ | (01) |
| D | | √ | (01) |

**33.** பின்வரும் கணக்குகளைச் சொத்துகள், பொறுப்புகள், வருமானம், செலவுகள், உரிமையாண்மை என வகைப்படுத்துக.

| **கணக்கு** | **வகைப்படுத்தல்** |
|---|---|
| A - ஐயக்கடன்களுக்கான ஏற்பாடு | ........................................................ |
| B - முற்பணமாகப் பெற்ற வாடகை வருமானம் | ........................................................ |
| C - நிறுத்திவைக்கப்பட்ட வருவாய்கள் | ........................................................ |
| D - அறவிடமுடியாக் கடன்கள் | ........................................................ |

**விடை**

33. A - சொத்துக்கள் (01)
B - பொறுப்புக்கள் (01)
C - உரிமையாண்மை (01)
D - செலவுகள் (01)

**34.** நிறுவனமொன்றின் வங்கிக் கணக்கு மீதியானது 31.03.2014 இல் ரூ. 680 000 ஆகும். எனினும் இம் மீதி இத்தினத்திலுள்ள வங்கிக் கூற்று மீதியுடன் உடன்படவில்லை. இவ் வேறுபாட்டுக்கான காரணங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

1. நிலையான கட்டளை கொடுப்பனவு ரூ. 10 000 புத்தகங்களில் பதியப்படவில்லை.
2. வங்கியில் வைப்புச் செய்யப்பட்ட ரூ. 40 000 காசோலையொன்று வசூலிக்கப்பட்டிருக்கவில்லை.

(அ) 31.03.2014 இல் வங்கிக் கூற்றின்படி மீதி எவ்வளவு ? ரூ. ......................................

(ஆ) 31.03.2014 இல் நிதி நிலைமைக் கூற்றில் காட்டப்பட வேண்டிய வங்கி மீதி எவ்வளவு ?

ரூ. ......................................

**விடை**

34. (அ) ரூ. 630 000 (02)
(ஆ) ரூ. 670 000 (02)

**35.** நிறுவனமொன்றின் பொது நாளேட்டில் பதியப்படும் **இரண்டு** வகையான கொடுக்கல் வாங்கல்களைக் குறிப்பிடுக.

1. ..................................................................................................................................
2. ..................................................................................................................................

**விடை**

35.
- தொடக்கப் பதிவுகள்
- நடைமுறை அல்லாத சொத்துக்களின் கடன் கொள்வனவு
- நடைமுறை அல்லாத சொத்துக்களின் கடன் விற்பனை
- வழுக்களைத் திருத்துதல்
- செம்மையாக்கல் பதிவுகள்
- கணக்குகளை மூடும் பதிவுகள்
- நடைமுறை அல்லாத சொத்துக்களின் பரிமாற்றம்

**(ஏதாவது 2 விடயங்களுக்கு 04 புள்ளிகள்)**

**36.** இலாப நோக்கற்ற நிறுவனமொன்றில் கீழே தரப்பட்டுள்ள தகவல்களைப் பெறக்கூடிய கணக்குகளைப் பெயரிடுக.

| | தகவல் | கணக்கு |
|---|---|---|
| A - | இனம் காணப்பட்ட வருடத்திற்கான சந்தா வருமானம் | ............................................... |
| B - | வருடத்திற்கான காசு உட்பாய்ச்சல்களும் வெளிப்பாய்ச்சல்களும் | ............................................... |

விடை

36. A - வருமானம் செலவுக் கணக்கு/ சந்தாக் கணக்கு (02)
    B - கொள்ளல் கொடுத்தல் கணக்கு/ காசேடு/ வங்கிக் கணக்கு (02)

**37.** சுமதி வியாபாரம் தமது செயற்பாடுகளை 01.04.2013 இல் ஆரம்பித்தது. இது பொருள்களை கிரயத்தில் 25% கூட்டி விற்பனை செய்கின்றது. 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான விற்பனை ரூ. 625 000 ஆகும். 31.03.2014 இல் சரக்கிருப்புகளின் கிரயம் ரூ. 20 000 ஆகும்.

பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) வருடத்திற்கான மொத்த இலாபம் ரூ. ...................................

(ஆ) வருடத்திற்கான கொள்வனவுகள் ரூ. ...................................

விடை

37. (அ) ரூ. 125 000 (02)
    (ஆ) ரூ. 520 000 (02)

**38.** உற்பத்தி நிறுவனமொன்றின் கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் **மிகப் பொருத்தமான** கணக்கீட்டு எண்ணக்கருவைக் குறிப்பிடுக.

| | சந்தர்ப்பம் | கணக்கீட்டு எண்ணக்கரு |
|---|---|---|
| A - | வருட இறுதியில் காணப்படும் மூலப்பொருள்களை கிரயத்தினதும், தேறிய தேறத்தக்கப் பெறுமதியினதும் குறைவான பெறுமதியில் மதிப்பிடல் | ................................. |
| B - | ஒவ்வொரு கணக்கீட்டுக் காலத்திற்கும் உற்பத்திக் கணக்கினைத் தயாரித்தல் | ................................. |
| C - | பொருள்களை விநியோகம் செய்வதற்கு முன்னர் வாடிக்கையாளரிடமிருந்து பெற்ற முற்பணத்தை பொறுப்பொன்றாக இனங்காணல். | ................................. |
| D - | உற்பத்திக் கணக்கில் இயந்திர பெறுமானத்தேய்வினை உற்பத்தி மேந்தலைகளாக இனங்காணல் | ................................. |

விடை

38. A - பாதுகாப்பு எண்ணக்கரு/ முன்னெச்சரிக்கை/ புத்திசாதுரியம்/ கூர்ந்தமதி (01)
    B - கால எண்ணக்கரு/ ஆவர்த்தனம் (01)
    C - அட்டுறு/ வருமானங்களை இனங்காணல்/ தேறல் எண்ணக்கரு (01)
    D - இணைத்தல் எண்ணக்கரு (01)

**39.** நிதிக் கணக்கிடலுக்கான எண்ணக்கரு சட்டகத்தின்படி பின்வரும் விடயங்களை வியாபாரத்தில் ஈடுபடும் கம்பனியொன்றின் வருமானமாக இனம் காணமுடியுமா என்பதனைக் குறிப்பிடுக.

| விடயம் | வருமானமாக இனம் காணல் (ஆம் / இல்லை) |
|---|---|
| A - காசு விற்பனை | ........................................... |
| B - கட்டடமொன்றினை விற்றுப் பெற்ற பணம் | ........................................... |
| C - நிலையான வைப்பொன்றிலிருந்து நடைமுறை ஆண்டுக்காகப் பெறவேண்டிய வட்டி | ........................................... |
| D - முதல் தடவையாக மோட்டார் வாகனங்களை மீள்மதிப்பீடு செய்தமை காரணமாக உருவாகிய மிகை | ........................................... |

**விடை**

39. A - ஆம் (01)
B - இல்லை (01)
C - ஆம் (01)
D - ஆம் (01)

- **40, 41, 42 ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்கு கீழே தரப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்துக.**

அன்ரன், பாரதி ஆகியோர் இலாப நட்டங்களை 3 : 2 எனும் விகிதத்தில் பகிர்ந்து பங்குடைமை ஒன்றை நடாத்தி வந்தனர். 01.04.2013 இல் பங்குடைமையில் சாலினி பங்காளராகச் சேர்ந்துள்ளார். இத்தினத்தில் சாலினி மூலதனமாக ரூ. 1 200 000 ஐ காசாகக் கொண்டு வந்ததுடன் பங்குடைமையின் நன்மதிப்பானது ரூ. 2 400 000 என மதிப்பீடு செய்யப்பட்டது. நன்மதிப்பானது புத்தகங்களில் சொத்தொன்றாக இனம் காணப்படாததுடன் அது தொடர்பான எல்லாச் சீராக்கங்களும் பங்காளர்களின் மூலதனக் கணக்குகள் ஊடாக மேற்கொள்ளப்பட்டன. இத்தினத்திலிருந்து அன்ரன், பாரதி, சாலினி ஆகியோர் 3 : 2 : 1 எனும் விகிதத்தில் இலாப நட்டங்களைப் பகிர்ந்து பங்குடைமையை தொடர்ந்து நடாத்தத் தீர்மானித்தனர். ஒவ்வொரு பங்காளரும் வருடாந்தச் சம்பளமாக ரூ. 120 000 பெற உரித்துடையவர்.

31.03.2013 இல் அன்ரன், பாரதி ஆகியோரின் மூலதனக் கணக்கு, நடைமுறைக் கணக்குகளின் மீதிகள் பின்வருமாறு இருந்தன:

| | அன்ரன் (ரூ.) | பாரதி (ரூ.) |
|---|---|---|
| மூலதனக் கணக்கு | 2 000 000 | 1 500 000 |
| நடைமுறைக் கணக்கு | 300 000 | 200 000 |

இவ்வருடத்தில் சாலினி பற்றாக ரூ. 80 000 இனை காசாக எடுத்துள்ளார். 31.03.2014 இல் இவரின் நடைமுறைக் கணக்கு மீதி ரூ. 280 000 ஆகும். ஏனைய இரண்டு பங்காளர்களும் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்தில் பற்றாக பணம் எதுவும் எடுக்கவில்லை.

**40.** 01.04.2013 இல் பங்குடைமையின் நன்மதிப்பைச் சீராக்குவதற்கான நாட்குறிப்புப் பதிவுகளை எழுதுக. (*விளம்பல் தேவையில்லை.*)

..........................................................................................................................................
..........................................................................................................................................
..........................................................................................................................................
..........................................................................................................................................

**விடை**

40.

| | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| மூலதனம் - அன்ரன் வரவு | 1 200 | |
| பாரதி வரவு | 800 | |
| மூசாலினி வரவு | 400 | |
| மூலதனம் - அன்ரன் | | 1 440 |
| பாரதி | | 960 |

(04)

**அல்லது**

| | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| மூலதனம் - சாலினி வரவு | 400 | |
| மூலதனம் - அன்ரன் | | 240 |
| பாரதி | | 160 |

(04)

**41.** 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்குடைமையின் இலாபம் : ரூ. . ………………………………………………

**விடை**

41. ரூ. 1 800 000 (04)

**42**. 31.03.2014 இல் பங்குடைமையின் உரிமையாண்மை : ரூ. …………………………………………………………

**விடை**

42. ரூ. 6 920 000 (04)

**43.** கம்பனியொன்று 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்தில் ஒவ்வொன்றும் ரூ. 30 விலையில் 100 000 சதாரண பங்குகளை வழங்கியது. 150 000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் முழுத் தொகையுடன் பெறப்பட்டன. கம்பனியானது 100 000 பங்குகளை விகிதாசார முறையில் ஒதுக்கீடு செய்ததுடன் மேலதிகப் பணம் விண்ணப்பதாரர்களுக்குத் திருப்பி அனுப்பப்பட்டது. பின்வருவனவற்றுக்கான நாட்குறிப்புப் பதிவுகளை எழுதுக. *(விளம்பல் தேவையில்லை.)*

(அ) விண்ணப்பத்துடன் பெற்ற காசு

………………………………………………………………………………………………………………

………………………………………………………………………………………………………………

(ஆ) பங்குகளுக்கான ஒதுக்கம்

………………………………………………………………………………………………………………

………………………………………………………………………………………………………………

**விடை**

43.

| | | வரவு | செலவு(ரூ.'000) | |
|---|---|---|---|---|
| (அ) வங்கிக் கணக்கு / காசுக்கணக்கு<br>மனு ஒதுக்கல் / பங்கு வழங்கல் கணக்கு | வரவு<br>செலவு | 4 500 | 4 500 | (02) |
| (ஆ) மனு ஒதுக்கல் / பங்கு வழங்களல் கணக்கு<br>கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனக் கணக்கு | வரவு<br>செலவு | 3 000 | 3 000 | (02) |

**44.** வியாபாரக் கம்பனியொன்றின் பின்வரும் கொடுக்கல் வாங்கல் தொடர்பான காசு வெளிப்பாய்ச்சல்களை செயற்பாட்டு, முதலீட்டு, நிதியிடல் நடவடிக்கைகளின் பொருத்தமான நிரலில் ' √' என அடையாளம் இடுவதன் மூலம் வகைப்படுத்துக.

| | | நடவடிக்கை: | |
|---|---|---|---|
| **கொடுக்கல் வாங்கல்கள்** | **செயற்பாட்டு** | **முதலீட்டு** | **நிதியிடல்** |
| A - பொருள் வழங்குனர்களுக்குக் கொடுத்துத் தீர்க்கப்படும் தொகை | …………… | …………… | …………… |
| B - குத்தகைக் கடன்கொடுத்தோருக்குச் செலுத்தப்படும் வருடாந்த குத்தகை தவணைக் கட்டணம் | …………… | …………… | …………… |
| C - சாதாரண பங்குதாரர்களுக்குச் செலுத்தப்படும் பங்கிலாபம் | …………… | …………… | …………… |
| D - காசுக்குக் கொள்வனவு செய்யப்படும் மோட்டார் வாகனம் | …………… | …………… | …………… |

**விடை**

44.

| | செயற்பாட்டு | முதலீட்டு | நிதியிடல் | |
|---|---|---|---|---|
| A | √ | | | (01) |
| B | | | √ | (01) |
| C | | | √ | (01) |
| D | | √ | | (01) |

**45.** குறித்த இலங்கைக் கணக்கீட்டு நியமத்தின்படி பின்வரும் கூற்றுகளில் எது **சரி,** எது **பிழை** என்பதை பொருத்தமான நிரலில் ' √ ' என அடையாளம் இடுவதன் மூலம் காட்டுக.

| **கூற்று** | **சரி** | **பிழை** |
|---|---|---|
| A - ஏற்பாடு என்பது நிச்சயமற்ற காலம் அல்லது தொகைக்கான பொறுப்பாகும். | ………… | …………… |
| B - நிறுவனமொன்றின் நிதிக்கூற்றுகளில் நிகழத்தக்க பொறுப்புகள் இனம் காணப்படும். | ………… | …………… |
| C - கணக்கீட்டு மதிப்பீட்டு மாற்றங்கள் நிறுவனமொன்றின் நிதிக் கூற்றுகளில் நடைமுறை, எதிர்கால கணக்கீட்டுக் காலப்பகுதிகளுக்கு சீராக்கப்படுகின்றன. | ………… | …………… |
| D - நிறுவனமொன்றின் கணக்கீட்டுக் கொள்கைகள் தொடர்பான தீர்மானமானது எப்போதும் அதன் முகாமைமையாளர்களின் விருப்பத்தின் அடிப்படையில் இடம்பெறும். | ………… | …………… |

விடை

| 45. | சரி | பிழை | |
|---|---|---|---|
| A | √ | | (01) |
| B | | √ | (01) |
| C | √ | | (01) |
| D | | √ | (01) |

**46.** கம்பனியொன்றின் விரைவுச் சொத்து விகிதத்தில் கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலும் ஏற்படுத்தும் தாக்கத்தை (**அதிகரிக்குமா / குறையுமா / மாற்றமில்லையா**) எனக் குறிப்பிடுக.

| **கொடுக்கல் வாங்கல்கள்** | **தாக்கம்** |
|---|---|
| A - கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு | …………………………………… |
| B - கடனடிப்படையில் கொள்வனவு செய்யப்பட்ட பொருட்களைத் திருப்பி அனுப்பியமை | …………………………………… |
| C - அடுத்த வருடத்திற்காக செலுத்திய காப்புறுதிக் கட்டணம் | …………………………………… |
| D - மோட்டார் வாகன விற்பனையிலிருந்து பெற்ற காசு | …………………………………… |

விடை

46. A - மாற்றமில்லை (01)
B - அதிகரிக்கும் (01)
C - குறையும் (01)
D - அதிகரிக்கும் (01)

**47.** கம்பனியொன்றின் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான விற்பனைகள் ரூ. 9 000 000 ஆகும். இவற்றுள் 80% கடன் விற்பனையாகும். இக் கம்பனியின் மொத்த இலாப எல்லையானது விற்பனையில் 30% ஆகும். பின்வரும் தகவல்களும் தரப்பட்டுள்ளன.

| | **31.03.2014 இல் உள்ளபடி (ரூ.)** | **31.03.2013 இல் உள்ளபடி (ரூ.)** |
|---|---|---|
| வியாபாரக் கடன்பட்டோர் | 1 000 000 | 800 000 |
| சரக்கிருப்பு | 500 000 | 900 000 |

வருடத்தின் வேலை நாட்களின் எண்ணிக்கை 360 எனக் கருதி 31.03.2014 இல் உள்ளபடி பின்வருவனவற்றைக் கணிக்குக.

(அ) கடன்பட்டோர் புரள்வு விகிதம் ………………………………

(ஆ) இருப்பு வைத்திருத்தல் காலம் ………………………………

விடை

47. (அ) 08 தடவைகள் (02) (ஆ) 40 நாட்கள் (02)

**48.** உற்பத்திக் கம்பனியொன்றின் கிரயம் தொடர்பான தரவுகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| நேர் மூலப் பொருள்கள் | அலகொன்றுக்கு | ரூ. 15 |
| நேர்க் கூலிகள் | அலகொன்றுக்கு | ரூ. 25 |
| மாறும் மேந்தலைகள் : | | |
| உற்பத்தி | அலகொன்றுக்கு | ரூ. 10 |
| உற்பத்தியல்லாதது | அலகொன்றுக்கு | ரூ. 15 |
| நிலையான மேந்தலைகள் : | | |
| உற்பத்தி | | ரூ. 50 000 |
| உற்பத்தியல்லாதது | | ரூ. 30 000 |

1 000 அலகுகள் கொண்ட இலக்கு உற்பத்திக்காகப் பின்வருவனவற்றைக் கணிப்பிடுக.

(அ) மொத்த உற்பத்தி மேந்தலைகள் ரூ. ................................

(ஆ) மொத்த மேந்தலைகள் ரூ. ................................

(இ) மொத்த மாறும் கிரயம் ரூ. ................................

விடை

48. (அ) ரூ. 60 000 (01) (ஆ) ரூ. 105 000 (01) (இ) ரூ. 65 000 (02)

**49.** கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படும் பொருள் 'X' தொடர்பாக பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| அலகுக்கான மாறும் கிரயம் | ரூ. | 90 |
| நிலையான கிரயம் | ரூ. | 60 000 |
| பங்களிப்பு-விற்பனை விகிதம் | | 40% |

பின்வருவனவற்றைக் கணிக்குக.

(அ) சமப்பாட்டுப் புள்ளி ரூ. ................................

(ஆ) 1200 அலகுகள் மட்டத்தில் எதிர்பார்க்கப்படும் இலாபம் ரூ. ................................

விடை

49. (அ) ரூ. 150 000 (02) (ஆ) ரூ. 12 000 (02)

**50.** வரையறுக்கப்பட்ட பெருமாள் கம்பனி புதிய இயந்திரமொன்றைக் கொள்வனவு செய்ய உத்தேசிக்கிறது. இவ் இயந்திரம் கொள்வனவு செய்யப்படுமாயின் பாவனையிலுள்ள இயந்திரத்தை ரூ. 200 000 இற்கு விற்பனை செய்ய முடியும். புதிய இயந்திரத்தின் பயன்தரு ஆயுட்காலம் 4 வருடங்களாகும். இது தொடர்பான மற்றைய விபரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ. '000 |
|---|---|
| இயந்திரத்தின் கொள்விலை | 600 |
| பொருத்துதல் கிரயம் | 50 |
| 4 ஆம் வருட முடிவில் எஞ்சிய பெறுமதி | 120 |
| ஆரம்பத்தில் தேவைப்படும் தொழிற்படு மூலதனம் | 100 |
| வருடாந்தம் எதிர்பார்க்கப்படும் காசு உட்பாய்ச்சல் | 240 |

பின்வருவனவற்றைக் கணிக்குக.

(அ) ஆரம்ப முதலீடு ரூ. ................................

(ஆ) 4 ஆம் வருடத்திற்கான மொத்த காசு உட்பாய்ச்சல்கள் ரூ. ................................

விடை

50. (அ) ரூ. 550 000 (02) (ஆ) ரூ. 460 000 (02)

***

### 2.1.5 வினாத்தாள் I இற்கு விடையளிக்கப்பட்டுள்ள விதம் பற்றிய முழுமையான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்




* நிதிக் கணக்கீடு தொடர்பிலான அடிப்படை அறிவு மற்றும் விளக்கத்தைப் பரீட்சிப்பதற்காக உள்ளடக்கப்பட்டிருந்த வினா இலக்கங்களான 1, 3, 4, 32, 33 ஆகிய வினாக்களுக்கு விண்ணணப்பதாரிகளில் 70% இற்கும் மேற்பட்ட வீதத்தினர் சரியாக விடைளயளித்துள்ளனர் என்பது மேலுள்ள வரைபடத்தின் மூலம் தெரியவருகின்றது.

* அதேபோன்று கணக்கீட்டு எண்ணக்கருக்கள், கூலிக்கிரயம், இலாப நோக்கற்ற நிறுவனங்களின் கணக்குகள், காசுப் பாய்ச்சல் கூற்று போன்றவற்றுடன் இணைந்த அடிப்படைக் கருமங்கள் தொடர்பில் உள்ளடக்கப்பட்டிருந்த வினாக்களான வினா இலக்கம் 06, 28, 36, 44 என்பவற்றிற்கும் விண்ணப்பதாரிகளில் 70% இற்கும் மேற்பட்டோர் சிறப்பாக விடையளித்திருந்தார்கள்.

* வினா இலக்கம் 7, 12, 21, 24, 29, 41, 42, 49, 50 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 30% அல்லது அதனை விடக் குறைந்தளவினரே சரியாக விடையளித்திருந்தார்கள். அவ்வினா இலக்கங்களின் மூலம் நிதி அறிக்கைப் படுத்தலின் எண்ணக்கரு ரீதியான சட்டகம், VAT சீராக்கம், நிதிக் கணக்கீட்டு விகிதங்கள், கிரய இலாப அளவுப்பகுப்பாய்வு, பங்குடமை வணிகம், மூலதன முதலீட்டுத் தீர்மானம் போன்ற வினாக்கள் கேட்கப்பட்டிருந்தன. இத்தலைப்பு தொடர்பில் மாணவர்களின் அறிவு மற்றும் விளக்கம் போதுமான அளவில் இல்லை என்பதனை இங்கு குறிப்பிட முடியும். அதற்கேற்ப மேலே குறிப்பிடப்பட்ட பாட விடயங்களில் மாணவர்களுக்கு நடைமுறை ரீதியான உதாரணங்களுடன் வகுப்பறையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் முக்கியமாகும்.

* வினா இலக்கம் 8, 13, 16, 20, 22, 23, 26, 30, 37, 40, 43, 46, 47, 48 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 30%-50% ஆனோரே சரியாக விடையளித்திருந்தனர். அவ்வினாக்களின் மூலம் வழுக்களைத் திருத்துதல், இருப்பிற்கும் இலாபத்திற்கும் இடையிலான தொடர்பு, பங்குடமை வணிகம், மொத்த விரிவான வருமானம், உரிமையில் ஏற்படுத்தும் தாக்கம், கணக்கீட்டு விகிதங்கள், பொது மேந்தலைக் கிரயம், மூலதன முதலீட்டு தீர்மானம், கம்பனியொன்று பங்கு வழங்கல் மற்றும் கிரய வகைப்படுத்தல் போன்ற பகுதிகள் தொடர்பிலான அறிவு, விளக்கம் பரீட்சிக்கப்பட்டுள்ளது.

* வினா இலக்கம் 2, 5, 9, 10, 11, 14, 15, 17, 18, 19, 25, 27, 31, 34, 35, 38, 39, 45 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரர்களில் 51%-69% இற்கு இடைப்பட்டவர்களே சரியாக விடையளித்துள்ளனர். அவ்வினாக்களின் மூலம் கணக்கீட்டுச் சமன்பாடு, கணக்கீட்டு எண்ணக்கருக்கள், கட்டுப்பாட்டுக் கணக்கு, கழிவு வகைகள், கிரய சூத்திரங்கள், ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களின் அகற்றல் தொடர்பிலான கணக்கீடு, இலாப நோக்கற்ற நிறுவனங்களின் கணக்குகள், பங்குடமை வணிகம், காசுப்பாய்ச்சல் கூற்று, கணக்கீட்டு நியமங்கள், கிரய வகைப்படுத்தல், வங்கி இணக்கக் கூற்று, மூல ஏடுகள், பங்குகள் என்பன தொடர்பிலான அறிவினையும் விளக்கத்தினையும் பரீட்சிப்பதற்கு முயற்சி எடுக்கப்பட்டுள்ளது.

* கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது மேற்குறிப்பிட்ட பாடப் பகுதிகள் தொடர்பில் கூடுதலாகக் கவனம் செலுத்தி செயற்பாட்டு ரீதியான தேர்ச்சியினை அடிப்படையாகக் கொண்டு உரிய பிரச்சினைகள் மற்றும் அதற்குரிய தீர்வுகள் கலந்துரையாடப்படுமாயின் அது மாணவர்களுக்கு மிகப் பயனுள்ளதாக அமையும் எனக் கூற முடியும்.

### 2.1.6 வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்குரிய விடைத் தெரிவுக்கான துலங்கல்கள் (சதவீதத்தில்)

| வினா இலக்கம் | சரியான தெரிவு | ஒவ்வொரு தெரிவும் செய்யப்பட்ட மாணவர் சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | விடையளிக்காத |
| 1 | 4 | 2% | 2% | 5% | 90% | 1% | 0% |
| 2 | 4 | 13% | 12% | 11% | 58% | 5% | 1% |
| 3 | 2 | 8% | 76% | 10% | 5% | 1% | 0% |
| 4 | 2 | 1% | 70% | 12% | 1% | 16% | 0% |
| 5 | 1 | 50% | 6% | 10% | 18% | 13% | 2% |
| 6 | 3 | 4% | 6% | 71% | 14% | 4% | 1% |
| 7 | 2 | 3% | 12% | 3% | 11% | 70% | 1% |
| 8 | 3 | 21% | 24% | 38% | 10% | 6% | 2% |
| 9 | 2 | 7% | 63% | 8% | 7% | 14% | 1% |
| 10 | 1 | 51% | 22% | 10% | 12% | 4% | 1% |
| 11 | 4 | 7% | 8% | 12% | 66% | 6% | 1% |
| 12 | 1 | 18% | 14% | 28% | 9% | 30% | 1% |
| 13 | 2 | 8% | 38% | 26% | 15% | 12% | 1% |
| 14 | 3 | 11% | 10% | 60% | 12% | 7% | 1% |
| 15 | 4 | 4% | 20% | 12% | 53% | 9% | 1% |
| 16 | 1 | 36% | 7% | 19% | 34% | 5% | 0% |
| 17 | 5 | 2% | 3% | 6% | 22% | 66% | 1% |
| 18 | 2 | 13% | 53% | 5% | 24% | 4% | 1% |
| 19 | 5 | 8% | 14% | 7% | 12% | 58% | 0% |
| 20 | 5 | 22% | 19% | 11% | 7% | 41% | 1% |
| 21 | 3 | 26% | 26% | 25% | 15% | 6% | 1% |
| 22 | 1 | 37% | 13% | 15% | 7% | 27% | 1% |
| 23 | 3 | 10% | 23% | 37% | 13% | 16% | 2% |
| 24 | 5 | 12% | 22% | 32% | 19% | 14% | 2% |
| 25 | 2 | 16% | 60% | 8% | 7% | 8% | 1% |
| 26 | 3 | 6% | 24% | 44% | 8% | 17% | 2% |
| 27 | 4 | 6% | 10% | 10% | 59% | 14% | 1% |
| 28 | 2 | 5% | 74% | 9% | 9% | 2% | 1% |
| 29 | 1 | 24% | 24% | 18% | 19% | 14% | 1% |
| 30 | 1 | 39% | 9% | 18% | 15% | 17% | 2% |

**அட்டவணை** 01

வினா இலக்கம் 1 தொடக்கம் 30 வரையிலான வினாக்களுக்கு துலங்களாக ஒவ்வொரு தெரிவினையும் தெரிவு செய்த விண்ணப்பதாரிகளின் வீதமானது மேலுள்ள அட்டவணை 01 இல் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு வினாவிற்கும் சரியான தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகளின் வீதமானது இங்கு நிழற்றிக் காட்டப்பட்டுள்ளது. அவற்றில் விசேடமாக இனம் காணப்பட்ட வினாக்கள் தொடர்பிலான பகுப்பாய்வுகள் கீழே காட்டப்பட்டுள்ளன.

வினா இலக்கம் 07 இற்குரிய **சரியான விடையாகிய 2 ஆவது தெரிவினை** விண்ணப்பதாரிகளில் ஏறக்குறைய 12% இனர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரிகளில் 70% இனர் 5 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்தனர். சொத்தொன்றின் பண்பாக "சொத்தொன்றினை இனம்காணும் நியதிகளும்" எடுக்கப்பட்டிருந்தமையே அதற்குரிய காரணமாகும். நிதிக்கணக்கீட்டின் எண்ணக்கரு ரீதியான சட்டகத்தை தெளிவுபடுத்தும்போது **சொத்தொன்றின் பண்புகள்** மற்றும் **இனம் காணும் நியதிகள்** என்பவற்றை வெவ்வேறாக விளங்கிக் கொள்ளக் கூடியவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 24 இற்கு **சரியான விடையாகிய 5 ஆவது தெரிவினை** விண்ணப்பதார்களில் 14% ஆனோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். 32% ஆன விண்ணப்பதாரர்கள் தமது விடையாக இலக்கம் 03 இனையே தெரிவு செய்திருந்தனர். விகிதத்தினைக் கணிப்பிடும்போது வரி மற்றும் வட்டியின் பின்னரான இலாபம் (நிதியாண்டுக்குரிய இலாபம்) பயன்படுத்தப்பட்டிருந்தமையே அவ்விடையினைத் தெரிவு செய்தமைக்கு காரணமாகும். விண்ணப்பதாரிகளில் 22% ஆனோர் 2 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்தனர். அதற்குக் காரணம் நிதியாண்டுக்குரிய இலாபத்திலிருந்து இடைக்காலப் பங்கிலாபத்தைக் கழித்த பின்னரான இலாபத்தைப் பயன்படுத்தி விகிதமானது கணிப்பிடப்பட்டிருந்தமையாகும். கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது மொத்தச் சொத்துக்களுக்குரிய விளைவு என்றால் என்ன என்பது மாணவர்களுக்கு விளங்கக் கூடியவாறு (அதாவது வரி மற்றும் வட்டிக்கு முன்னரான இலாபம்) விளக்கத்தைப் பெற்றுக் கொடுத்தல் முக்கியமானது எனக் கூற முடியும்.

வினா இலக்கம் 12 இற்குரிய சரியான விடையாகிய **01** ஆவது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 18% ஆனோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரிகளில் 30% இனர் 5 ஆவது தெரிவினையும், 28% ஆனோர் 3 ஆவது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். 5 ஆவது தெரிவினை தெரிவுசெய்திருந்த விண்ணப்பதாரிகளில் செலுத்திய VAT இனை இயந்திரக் கிரயத்துடன் சேர்த்திருந்ததுடன், 3 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரர்கள் இயந்திரத்தின் கிரயத்துடன் VAT ஐ சேர்த்திருந்ததுடன், ஆரம்ப பரிசோதனைக் கிரயத்தைக் கவனத்தில் கொள்ளவில்லை.

VAT தொடர்பில் பதிவு செய்யப்பட்ட கம்பனியொன்று ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களை கொள்வனவு செய்யும்போது செலுத்திய VAT இனை மீளப் பெற்றுக் கொள்ளமுடியும் என்பதனால் கிரயத்துடன் அது சேர்க்கப்படுவதில்லை என்பதனை அம் மாணவர்கள் விளங்கியிருக்கவில்லை என்பது தெளிவாவதுடன் ஆரம்ப பரிசோதனைக் கிரயத்தை, கிரயத்துடன் சேர்க்கும்போது அதன் மூலம் பெற்ற வருமானம் பதிவழிக்கப்பட்டு கிரயத்துடன் சேர்க்கப்படுதல்வேண்டும் என்பது தொடர்பிலான விளக்கம் இல்லை என்பது தெளிவாகின்றது. கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது LKAS 16 இற்குரிய பயிற்சிகளை செய்ய வைப்பது மிகப் பொருத்தமானது.

வினா இலக்கம் 29 இற்கான சரியான விடையாகிய 1 ஆவது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 24% ஆனோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர் விண்ணப்பதாரிகளில் 24% ஆனோர் 2 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்தனர். அலகொன்றிற்கான விற்பனை விலை மற்றும் **அலகொன்றின் மாறும் கிரயம் போன்ற இரண்டு பிரிவுகளும் குறையும்போது** எனும் வசனத்தை கவனத்தில் கொண்டு பங்களிப்பு விற்பனை விகிதம் குறைவடையும் என்பதை விளங்கி 2 ஆவது தெரிவு விடையாக உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இதன் மூலம் தொகைகளை பிரதியீடு செய்யாது விடைக்கான தீர்வொன்று வழங்கப்பட்டுள்ளது என்பது தெளிவாகின்றது. கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளினூடாக கருதுகோளாக கொள்ளப்படுகின்ற தொகைகளைப் பயன்படுத்தி விடையினைக் கண்டுபிடிப்பதற்கு மாணவர்களுக்கு அறிவூட்டுதல் மிக முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 21 இற்கான சரியான விடையாகிய 3 ஆவது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 25% ஆனோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரிகளில் 26% ஆனோர் 1 ஆவது தெரிவினையும் விண்ணப்பதாரினல் 26% ஆனோர் 2 ஆவது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். 1 ஆவது தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகள் இலாபத்தின் தேறிய குறைவிற்கு மீள்மதிப்பீட்டின் பற்றாக்குறையினை கவனத்தில் கொள்ளவில்லை என்பதுடன் மொத்த வருமானக் குறைவிற்குப் பதிலாக ஏனைய விரிவான வருமானக் குறைவு எடுக்கப்பட்டுள்ளது என்பதுடன் அதனைக் கண்டுபிடிக்கும்போது முன்னைய வருடங்களில் காணப்பட்ட மீள் மதிப்பீட்டு மிகையினைக் கவனத்தில் கொள்ளாது விட்டுள்ளனர். 2 ஆவது தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகளில் இலாபத்தின் தேறிய குறைவினை சரியாகக் கணிப்பிட்டிருந்தாலும் விரிவான வருமானக் குறைவுக்குப் பதிலாக **ஏனைய விரிவான** வருமானக் குறைவு எடுக்கப்பட்டுள்ளது.

முன்னைய வருடமொன்றில் மீள் மதிப்பீட்டு மேலதிகம் அல்லது பற்றாக்குறை காணப்படும்போது நடைமுறையாண்டில் மீள் மதிப்பீட்டு மேலதிகம் அல்லது பற்றாக்குறையொன்று ஏற்படுமாயின் அதனை சீராக்குதல் எவ்வாறு என்பதனையும், அவற்றை நிதிக் கூற்றுக்களில் எவ்வாறு இனம் காட்டுவது என்பது தொடர்பிலான விளக்கம் கிடைக்கும் வகையிலும் ஏனைய விரிவான வருமானங்கள் மற்றும் மொத்த விரிவான வருமானத்தை கட்டியெழுப்புவது எவ்வாறு என்பது தொடர்பிலும் விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை கட்டியெழுப்புவது முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 16 இற்குரிய சரியான விடையாகிய 1 ஆவது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 36% ஆனோர் தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரிகளில் 34% ஆனோர் 4 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்தனர். 4 ஆவது தெரிவினை தெரிவு செய்தபோது A, C சரியானது என்பது தெரிந்திருந்தபோதும் 24 ஆவது பிரிவின் படி மூலதனத்திற்கு மேலதிகமாக இடப்படுகின்ற கடனுக்காக வழங்கப்படுகின்ற 5% வட்டியின் அடிப்படையில் D சரியானது என தீர்மானித்திருக்கக் கூடும் எனக் கருதலாம். இதன் மூலம் கருதுவது என்னவெனில் பங்குடமைக் கட்டளைச் சட்டத்தின் 24 ஆவது பிரிவு மற்றும், 42 ஆவது பிரிவு என்பவற்றில் நிபந்தனைகள் தொடர்பில் விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளை ஒழுங்குபடுத்தப்படல் முக்கியமானது எனலாம்.

வினா இலக்கம் 22 இற்கான சரியான விடையாகிய 1 ஆவது தெரிவினை தெரிவு செய்துள்ளவர்களின் வீதம் 37% ஆகும். 27% ஆனோர் 5 ஆவது தெரிவினைத் தெரிவு செய்துள்ளனர். நிறுத்தி வைத்த இலாபத்தை மூலதனமாக்கல் உரிமையில் அதிகரிப்பொன்றாக கருதியே 5 ஆவது தெரிவினை தெரிவு செய்தமைக்கான காரணமாயிருந்திருக்கலாம். ஒதுக்கமானது உரிமையின் ஒரு பகுதி என்பதனை தெளிவுபடுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறை ஒழுங்குபடுத்தப்படல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 23 இற்கான சரியான விடையாகிய 3 ஆவது விடையினை 37% ஆனோரே தெரிவு செய்துள்ளனர். 23% ஆனோர் 2 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்தனர். உரிமையின் அடிப்படையில் அனுகூல வீதத்தினை தெரிவு செய்யும்போது நிதியாண்டுக்குரிய இலாபத்தையே பயன்படுத்த வேண்டும். எனினும் விண்ணப்பதாரிகள் நிதியாண்டுக்குரிய இலாபத்திலிருந்து செலுத்திய இடைக்காலப் பங்கிலாபத்தை கழித்து பின்னர் வரும் இலாபத்தை பயன்படுத்திக் கணித்தமையே 2 ஆவத தெரிவு செய்தமைக்கான காரணமாயிருக்கலாம். உரிமையின் அடிப்படையிலான அனுகூல வீதத்தைக் கணிக்கும்போது நிதியாண்டுக்குரிய இலாபமே பயன்படுத்தப்பட வேண்டும் என்பதனை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறை ஒழுங்கமைக்கப்படல் மிக முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 08 இற்குரிய சரியான விடையாகிய 3 ஆவது தெரிவினை தெரிவு செய்துள்ளவர்கள் 38% ஆகும். 24%ஆனோர் 2 ஆவது தெரிவினையும், 21% ஆனோர் 1 ஆவது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். 2 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரிகளுக்கு இரு பதிவுகளும் ஒரே பக்கத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கும்போது அவ்வழுவினைத் திருத்துவது தொடர்பிலான விளக்கம் இல்லாதிருந்ததுடன், வழுவினைத் திருத்த முன்னர், தொங்கல் கணக்கில் ஏற்பட்டுள்ள மீதி வரவா, செலவா என்பதை இனங்காணக் கூடிய விளக்கமும் இல்லாதிருந்தது என்பது தெரிய வந்தது.

1 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரிகளுக்கு கொடுக்கல் வாங்கலொன்றின் இரண்டு பதிவுகளும் ஒரே பக்கத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கும்போது அவ்வழுவினைத் திருத்துவது தெடர்பிலான விளக்கம் இல்லாதிருந்ததை அறியக் கூடியதாக இருந்தது. எனினும் வழுவினைத் திருத்துவதற்கு முன்னர் தொங்கல் கணக்கின் மீதியினை இனம் காணக்கூடிய அறிவு அவர்களிடம் காணப்படுகின்றது என்பதை அறியக் கூடியதாக இருந்தது.

கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாக வழுக்களைத் திருத்துதல் தொடர்பான அட்டவணை மற்றும் தொங்கல் கணக்கு என்பவற்றைக் கற்பிப்பதன் மூலம் விண்ணப்பதாரர்கள் பலவீனமாகவுள்ள சந்தர்ப்பங்களை இனங்கண்டு கற்பித்தல் கருமங்களை ஒழுங்கு செய்தல் வேண்டும் என்பது முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 13 இற்குரிய சரியான விடையாகிய **2** ஆவது தெரிவினை விண்ணப்பதாரிகள் 38% ஆனோர் தெரிவு செய்திருந்தனர். எனினும் விண்ணப்பதாரிகளில் 26% ஆனோர் 3 ஆவது தெரிவினையும் உறுதிப்படுத்தியிருந்தனர். 3 ஆவது தெரிவினை தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரிகளில் பிழையான தெரிவிற்குப் போவதற்கான காரணம் இருப்பிற்கும் இலாபத்திற்கும் இடையிலான தொடர்பினை இவர்கள் அறிந்திருந்தாலும் வினாவினூடாக சரியான மொத்த இலாபம் மற்றும் தேறிய இலாபம் கேட்கப்பட்டிருந்தாலும் வினாவினை சரியாக வாசித்து விளங்குவதில் காணப்பட்ட பலவீனம் காரணமாக பிழையான மொத்த இலாபமும் பிழையான தேறிய இலாபமும் இங்கு முன்வைக்கப்பட்டது.

கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாக மாணவர்களுக்கு வினாக்களை சரியாக வாசித்து விளங்கி விடையளிப்பதற்கான பயிற்சியினை வழங்குதல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 20 இற்குரிய சரியான விடையாகிய **5** ஆவது தெரிவினைத் தெரிவு செய்த விண்ணப்பதாரிகள் 41% ஆகும். விண்ணப்பதாரர்களில் 22% ஆனோர் 1 ஆவது தெரிவினைத் தெரிவு செய்திருந்தனர்.

1 ஆவது தெரிவினை தெரிவு செய்தமைக்கான காரணம் LKAS 1இற்கேற்ப மொத்த விரிவான வருமானம் தொடர்பான வரைவிலக்கணத்தின் விளக்கம் இல்லாமையாகும்.

LKAS 1இன் எண்ணக்கருவினை மாணவர்களுக்கு விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் ஒழுங்குபடுத்தப்படல் முக்கியமானதாகும்.

**2.1.7 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் வழங்கப்பட்டுள்ள விதம்.**

| வினா இலக்கம் | புள்ளிகள் பெற்றுள்ள சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | புள்ளி 0 | புள்ளி 1 | புள்ளி 2 | புள்ளி 3 | புள்ளி 4 | விடையளிக்காத |
| 31 | 13% | 12% | 20% | 32% | 19% | 5% |
| 32 | 1% | 9% | 20% | 43% | 27% | 0% |
| 33 | 2% | 9% | 21% | 25% | 42% | 0% |
| 34 | 29% | 0% | 20% | 0% | 46% | 5% |
| 35 | 22% | 1% | 30% | 1% | 43% | 4% |
| 36 | 8% | 1% | 23% | 0% | 66% | 3% |
| 37 | 35% | 1% | 14% | 1% | 41% | 8% |
| 38 | 7% | 17% | 26% | 25% | 21% | 3% |
| 39 | 1% | 13% | 27% | 39% | 18% | 1% |
| 40 | 47% | 0% | 1% | 0% | 38% | 14% |
| 41 | 57% | 0% | 1% | 0% | 17% | 25% |
| 42 | 63% | 0% | 0% | 0% | 11% | 25% |
| 43 | 37% | 0% | 17% | 1% | 31% | 15% |
| 44 | 5% | 7% | 12% | 35% | 39% | 1% |
| 45 | 3% | 10% | 30% | 30% | 26% | 1% |
| 46 | 11% | 26% | 33% | 17% | 11% | 2% |
| 47 | 44% | 0% | 22% | 0% | 19% | 15% |
| 48 | 34% | 12% | 22% | 5% | 18% | 10% |
| 49 | 46% | 0% | 24% | 0% | 13% | 16% |
| 50 | 56% | 0% | 23% | 0% | 9% | 12% |

**அட்டவணை 02**

மேற்குறிப்பிட்ட அட்டவணை இலக்கம் 02 இனூடாக வினா இலக்கம் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகளைப் பெற்றுக் கொண்டுள்ள முறை காட்டப்பட்டுள்ளது. அதற்கேற்ப வினா இலக்கம் 41, 42, 56 போன்றவற்றிற்கு 0 புள்ளிகள் (பூச்சியம்) பெற்றவர்களின் வீதம் 50% வீதத்தையும் தாண்டியுள்ளது.

அதற்கேற்ப கணக்கீட்டுக் கோட்பாடுகள் தொடர்பிலான அறிவினைச் செயற்பாட்டு ரீதியாகப் பயன்படுத்துகின்ற அறிவு பலவீனமான நிலையில் காணப்படுவதுடன் அவ்வினாவினை வாசித்து சரியாக விளங்கியிருக்கவில்லை என்பது தெரியவருகின்றது.

வினா இலக்கம் 40, 41, 42 போன்ற மூன்று வினாக்களுக்கும் விடையளிப்பதற்கு குறித்த நிதியாண்டில் ஆரம்பத் திகதியில் புதிய பங்காளர் ஒருவர் இணையும் பங்குடமை வணிகத்துடன் தொடர்புடைய தகவல்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இவற்றில் வினா இலக்கம் 42 இன் மூலம் வருட முடிவுத்திகதியில் மொத்த உரிமை தொடர்பில் குறித்த விடையொன்று மாத்திரமே எதிர்பார்க்கப்பட்டதுடன் அவ்விடையினை எழுதி மொத்தப் புள்ளியாகிய 4 புள்ளியினையும் விண்ணப்பதாரிகளில் 11% ஆனோர் மாத்திரமே பெற்றிருந்தனர். விண்ணப்பதாரிகளில் 63% ஆனோர் 0 (பூச்சியம்) புள்ளியைப் பெற்றிருந்ததுடன் 25% ஆனோர் எந்த விடையினையும் எழுதியிருக்கவில்லை. நடைமுறைக் கணக்கிலும், மூலதனக் கணக்கிலும் உரிய சீராக்கங்களை செய்து மொத்த உரிமையினைக் கணித்துப் பெற்றுக் கொள்ளும் அறிவு பலவீனமான நிலையில் காணப்படுகின்றது என்பதனை இது காட்டுகின்றது.

வினா இலக்கம் 41 குறித்த ஒரு விடையினை எதிர்பார்க்கின்ற வினா என்பதுடன் விண்ணப்பதாரிகளில் 57% ஆனோர் 0 (பூச்சியம்) புள்ளியினையே பெற்றிருந்தனர். 25% ஆனோர் எவ்வித விடையினையும் எழுதியிருக்கவில்லை என்பதுடன், மொத்தப்புள்ளியாகிய 4 இனையும் விண்ணப்பதாரர்களில் 17% ஆனோர் மாத்திரமே பெற்றிருந்தனர். இப்பிரச்சினையின் பங்குடமை வணிகத்தின் இலாபமானது நடைமுறைக் கணக்கின் மூலம் கணிக்கப்படல் வேண்டும். இலாபப்பகிர்வு, மற்றும் அது நடைமுறைக் கணக்கில் பதியப்படுகின்ற முறை என்பன தொடர்பிலான விளக்கம் போதுமான அளவில் இல்லை என்பது தெளிவாகின்றது.

வினா இலக்கம் 40 இற்கு 0 (பூச்சியம்) புள்ளியைப் பெற்றவர்களின் வீதம் 47% என்பதுடன், 14% ஆனோர் எவ்வித விடையினையும் அளித்திருக்கவில்லை. இதன் மூலம் விடையாக எதிர்பார்க்கப்பட்டது நன்மதிப்புச் சீராக்கம் தொடர்பிலான பொது நாட்குறிப்பு பதிவு என்பதுடன் அதற்கான சரியான விடையினை விண்ணப்பதாரர்களில் 38% ஆனோர் மாத்திரமே எழுதியிருந்தனர்.

பங்குடமை வணிகம் தொடர்பிலான பாரம்பரிய வினாக்களுக்கு விடையளிப்பதற்கே மாணவர்கள் பழக்கப்பட்டு பயிற்சி பெற்றுள்ளனர் என்பதுடன், அது தொடர்பிலான கணக்கு வைப்பின் தொடர்பு மற்றும் உள்ளடக்கம் தொடர்பிலான அறிவு மிகப் பலவீனமாக காணப்படுவதும் தெரிய வருகின்றது. இலாப நட்டப் பகிர்வுக்கணக்கு மற்றும் நடைமுறைக் கணக்கு என்பவற்றுக்கிடையில் காணப்படுகின்ற தொடர்பு சம்பந்தமான விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் நடைமுறைகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

50 ஆவது வினாவிற்கு 0 (பூச்சியம்) புள்ளிகளைப் பெற்ற விண்ணப்பதாரிகள் 56% என்பதுடன் 12% ஆன விண்ணப்பதாரர்கள் எவ்வித விடையினையும் அளித்திருக்கவில்லை. இதன் மூலம் கணக்கீட்டுப் பாடத்திட்டத்தின் இறுதித் தேர்ச்சியாகிய மூலதன முதலீட்டு தீர்மானம் தொடர்பிலான விடையே எதிர்பார்க்கப்பட்டது. இது தொடர்பிலான விளக்கம் போதுமான அளவில் காணப்படாமையே இதற்குக் காரணமாக இருக்கலாம். போதுமான பயிற்சிகளை வழங்குவதன் மூலம் இது தொடர்பிலான விளக்கத்தைப் பெற்றுக் கொடுப்பது முக்கியமானதாகும்.

49 ஆவது வினாவிற்கு 0 (பூச்சியம்) புள்ளிகளைப் பெற்ற விண்ணப்பதாரிகள் 46% என்பதுடன் 16% ஆன விண்ணப்பதாரிகள் எவ்வித விடையினையும் அளித்திருக்கவில்லை. இவ்வினாவினூடாக கணக்கீட்டுப் பாடத்திட்டத்தின் இறுதித் தேர்ச்சி மட்டமாகிய கிரய இலாப அளவுப் பகுப்பாய்வு தொடர்பான விடை எதிர்பார்க்கப்பட்டது. இத் தலைப்புத் தொடர்பில் மாணவர்களின் விளக்கம் போதுமான அளவில் இல்லை என்பது விடையளித்துள்ள முறையின் மூலம் தெரியவருகின்றது. கற்றல் - கற்பித்தல் செயன்முறையின் மூலம் நிலையான கிரயம், மாறும் கிரயம் என்பவற்றை இனங்காணல் மற்றும் கிரய இலாப அளவுப்பகுப்பாய்விற்குரிய எண்ணக்கருக்களுக்கிடையில் காணப்படுகின்ற தொடர்பினை உறுதிப்படுத்தும் வகையிலும் பயிற்சிகளை கொடுத்தல் மிகப் பொருத்தமானதாகும்.

47 ஆவது வினாவிற்கு 0 (பூச்சியம்) புள்ளிகளைப் பெற்ற விண்ணப்பதாரிகள் 44% ஆகக் காணப்பட்டதுடன் 15% ஆன விண்ணப்பதாரர்கள் எவ்வித விடையினையும் அளித்திருக்கவில்லை. இவ்வினாவின் மூலம் விண்ணப்பதாரர்கள் கணக்கீட்டு விகிதம் தொடர்பில் பெற்றுள்ள விளக்கத்தைப் பரீட்சிக்கவே எதிர்பார்க்கப்பட்டது. இவ்வினாவிற்கு சிறந்த துலங்கல் காட்டப்படாமைக்கு விண்ணப்பதாரர்கள் சூத்திரங்களை மனப்பாடம் செய்வதற்கு ஊக்குவிக்கப்பட்டிருந்தமையும் அவற்றின் மாற்றங்களுக்கிடையில் காணப்படுகின்ற தொடர்பு மற்றும் பயன்பாடு என்பவற்றிற்கு பிரதியீடு செய்ய முடியாமல் போனமையுமே காரணமாகும். தேவையான பயிற்சிகளை மாணவர்களுக்கு வழங்கி மேற்கொள்ளச் செய்வதன் மூலம் மாணவர்களுக்கு இது தொடர்பான விளக்கத்தை பெற்றுக் கொடுக்கலாம்.

வினா இலக்கம் 43 இற்கு விண்ணப்பதாரிகளில் 37% (பூச்சியம்) புள்ளிகளைப் பெற்றுள்ளதுடன் விண்ணப்பதாரிகள் 15% ஆனோர் எவ்வித விடையினையும் அளித்திருக்கவில்லை. இதற்குரிய உச்ச புள்ளியாகிய 04 னையும் விண்ணப்பதாரிகளில் 31% ஆனோர் மாத்திரமே பெற்றிருந்தனர். கம்பனிக் கணக்குகளில் பெரும்பாலான மாணவர்கள் தமது கவனத்தை கூடுதலாக நிதிக்கூற்றுகளில் செலுத்துவதுடன் அடிப்படைப் பாட விடயப் பகுதி தொடர்பில் கவனத்தில் கொள்ளாதிருந்தமை இங்கு இடம்பெற்றுள்ளது என்பதனை அறியக் கூடியதாக இருந்தது.

வினா இலக்கம் 37 இற்கு விண்ணப்பதாரிகளில் 35% ஆனோர் 0 (பூச்சிய)ப் புள்ளியினையே பெற்றிருந்ததுடன், 8% ஆனோர் எவ்விடையினையும் அளித்திருக்கவில்லை. எனினும் 41% ஆனோர் உச்ச புள்ளியாகிய 04 இனையும் பெற்றிருந்தனர். வினாவினுள் காணப்பட்ட கிரயத்தினடிப்படையிலான **மொத்த இலாப எல்லையினை விற்பனை விலையில் அடிப்படையில் மொத்த இலாப எல்லைக்கு மாற்றுவதில்** விண்ணப்பதாரர்களுக்கு காணப்பட்ட விளக்கமின்மையே இதற்குரிய காரணமாக இருக்கலாம். வினாவினை சரியான முறையில் வாசித்து பெறுமதியானது விற்பனை விலையிலா கிரயத்திலா வழங்கப்பட்டுள்ளது. மற்றும், மொத்த இலாப எல்லையானது எவ்விலையில் வழங்கப்பட்டுள்ளது என்பது விளங்கும் வகையில் பயிற்சிகளை வழங்குவது மிகப் பொருத்தமானதாகும்.

வினா இலக்கம் 48 இற்கு விண்ணப்பதாரர்களின் 34% ஆனோர் 0 (பூச்சிய)ப் புள்ளியினைப் பெற்றிருந்ததுடன், 10% ஆனோர் எவ்வித விடையினையும் வழங்கியிருக்கவில்லை. எனினும் 22% ஆனோர் 02 புள்ளியினையும் 18% ஆனோர் 04 புள்ளியினையும் பெற்றிருந்தனர். நிலையான கிரயம், மாறும் கிரயம் என்பன தொடர்பில் காணப்படுகின்ற குறைவான விளக்கமும், நிதிக் கணக்கீட்டிலும் மற்றும் முகாமைக் கணக்கீட்டிலும் கிரய வகைப்படுத்தலில் காணப்படுகின்ற தொடர்பானது மிகப் பலவீனமான மட்டத்தில் காணப்படுவது இதன் மூலம் தெரியவருகின்றது. கற்றல் - கற்பித்தல் செயன்முறையின்போது இது தொடர்பில் கூடுதலாகக் கவனம் செலுத்துவது மிக முக்கியமானது.

விண்ணப்பதாரர்கள் விடையளிக்கும்போது மேற்குறிப்பிட்ட முறையிலான சிற்சில பலவீனங்களைக் காட்டினாலும் 1 ஆவது வினாவிற்கு மிகச் சிறப்பான 90% துலங்களைக் காட்டியுள்ளனர். இவ்வினா கணக்கீட்டின் தொழிற்பாடுகள் தொடர்பான வினாவாகும். வினா இலக்கம் 03, 04, 06, 28, 32, 33, 36, 44 ஆகியவற்றுக்கு விண்ணப்பதாரிகளின் துலங்கள் 70%-80% வரை காணப்பட்டது. இத்துலங்களானது போதுமான அளவில் காணப்படவில்லை எனக் கூறலாம். கணக்கீட்டுச் செயன்முறைக் கருமங்களின் ஒழுங்கு முறை, மூல ஏடுகள் தொடர்பிலான அறிவு, கணக்கீட்டு எண்ணக்கருக்கள், கூலிக்கிரயம், கணக்கீட்டு வகைப்படுத்தல்கள், இலாப நோக்கமற்ற நிறுவனங்கள் பேணிச் செல்கின்ற கணக்குகள் தொடர்பிலான விளக்கம் காசுப் பாய்ச்சல் கூற்றின் வகைப்படுத்தல்கள் என்பவை தொடர்பிலான அறிவை இனம் காண்பதற்குரிய வினாக்களாகும்.

மேற்குறிப்பிட்ட விடயங்கள் தொடர்பில் கூடுதலாகக் கவனத்தை ஈர்க்கக் கூடிய வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்குபடுத்தப்படுமாயின் இவ்வீதத்தை மேலும் அதிகரித்துக் கொள்ளலாம் என்பதை இங்கு குறிப்பிடலாம்.

## 2.2 வினாத்தாள் II உம் அதற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான தகவல்களும்

### 2.2.1 வினாத்தாள் II இன் கட்டமைப்பு

நேரம் 3 மணித்தியாலம்

இவ்வினாத்தாள் 07 வினாக்களை கொண்டுள்ளது. முதலாம், இரண்டாம் வினாக்கள் கட்டாயமானவை என்பதுடன், ஒரு வினாவிற்கு 20 புள்ளிகள் வீதம் அவற்றிற்கு 40 புள்ளிகளாகும். ஏனைய 05 வினாக்களில் 04 வினாக்களைத் தெரிவு செய்தல் வேண்டும் என்பதுடன் அவற்றில் ஒரு வினாவிற்கு 15 புள்ளிகள் வீதம் மொத்தம் 60 புள்ளிகளாகும். மொத்தம் 100 புள்ளிகளாகும்.

இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் :

வினாத்தாள் I = 100 புள்ளிகள்

வினாத்தாள் II = 100 புள்ளிகள்

இறுதிப் புள்ளிகள் 200 ÷ 2 = 100

* விடைத்தாள் மதிப்பீட்டின் போது சகல வினாக்களுக்கும் புள்ளிகள் இரட்டிப்பாக்கி வழங்கப்படும். அதற்கேற்ப இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் :

வினாத்தாள் I = 200 புள்ளிகள்

வினாத்தாள் II = 200 புள்ளிகள்

இறுதிப் புள்ளிகள் 400 ÷ 4 = 100

**2.2.2 வினாத்தாள் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்**

**வினாத்தாள் II இல் ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கப்பட்டமை தொடர்பிலான அவதானிப்புகள், வரைபடம் 2, 3, 4. என்பவற்றின் அடிப்படையில் இது தயாரிக்கப்பட்டுள்ளது. வினாக்களுக்கு உரிய வரைபடங்கள் ஒவ்வொரு வினாவினதும் அவதானிப்பு, முடிவுகளுடனும் இங்கு தரப்பட்டுள்ளது.**

**வினாப்பத்திரம் II**

**வினா இலக்கம் - 01**

**1.** இனிப்பு பண்டங்கள் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள வரையறுக்கப்பட்ட அரவிந் பொதுக்கம்பனியின் 31.03.2014 இல் உள்ளவாறான பரீட்சைமீதி பின்வருமாறு தரப்பட்டுள்ளது.

| | வரவு (ரூ. '000) | செலவு (ரூ. '000) |
|---|---|---|
| 01.04.2013 இல் சரக்கிருப்பு | 1 500 | |
| வியாபார வருமதிகள் (வியாபாரக் கடன்பட்டோர்) | 4 000 | |
| வங்கியிலுள்ள காசு | 838 | |
| மூன்று மாத திறைசேரி உண்டியல்கள் (31.03.2014 இல் முதலிடப்பட்டது) | 800 | |
| நிலையான வைப்பு (வருடாந்தம் 10% வட்டியில் 01.10.2013 இல் இரண்டு வருடங்களுக்குத் திறக்கப்பட்டது) | 1 600 | |
| குத்தகை வட்டி | 960 | |
| கொள்வனவுகள் | 7 500 | |
| சம்பளங்கள் | 1 200 | |
| ஊழியர் சேமலாப நிதி (ஊ.சே.நி.) செலவு | 135 | |
| ஊழியர் நம்பிக்கை நிதி (ஊ.ந.நி.) செலவு | 27 | |
| காப்புறுதி | 840 | |
| மோட்டார் வாகன எரிபொருள் செலவு | 50 | |
| நடைமுறையாண்டின் முதல் இரு காலாண்டுகளுக்காகச் செலுத்திய வரி | 290 | |
| ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் - கிரயத்தில் | 12 000 | |
| 01.04.2013 இல் ஐயக்கடன் ஏற்பாடு | | 320 |
| விற்பனைகள் | | 12 500 |
| செலுத்த வேண்டிய ஊ.சே.நி. | | 30 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | | 9 000 |
| 01.04.2013 இல் நிறுத்தி வைக்கப்பட்ட வருவாய்கள் | | 1 040 |
| 01.04.2013 இல் உள்ளவாறான பொது ஓதுக்கம் | | 1 250 |
| வியாபாரக் கொடுக்குமதிகள் (வியாபாரக் கடன்கொடுத்தோர்) | | 2 500 |
| 01.04.2013 இல் உள்ளவாறான ஆதனம், பொறி மற்றும் உபகாரணங்களின் திரண்ட பெறுமானத் தேய்வு | | 2 060 |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 3 040 |
| | 31 740 | 31 740 |

**மேலதிக தகவல்கள்:**

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுகளைத் தயாரிப்பதற்கு முன்னர் பின்வரும் விடயங்கள் சீராக்கப்பட வேண்டும்.

(i) 31.03.2014 இல் சரக்கிருப்பின் கிரயம் ரூ. 2 000 000 ஆகும். இத்தினத்தில் சரக்கிருப்பின் தேறிய தேறக்கூடிய பெறுமதி ரூ. 1 800 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளது.

(ii) வருட முடிவில், ரூ. 400 000 இனை அறவிட முடியாக்கடனாகப் பதிவழிக்கவும் வியாபார வருமதிகளின் மிகுதித் தொகைக்கு 10% ஐயக்கடன் ஏற்பாடு செய்யவும் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இக்கம்பனி அறவிடமுடியாக் கடனுக்கும் ஐயக்கடன் ஏற்பாட்டிற்கும் தனித்தனியாக கணக்குகளைப் பேணுகின்றது.

(iii) எல்லாச் சொத்துக்களும் ஒரு தொகுதியாகக் கருதப்பட்டு 01.10.2013 இல் காப்புறுதி செய்யப்பட்டன. 30.09.2014 இல் முடிவடையும் வருடத்திற்கான முழுக் கொடுப்பனவும் செலுத்தப்பட்டு அது செலவாகக் கணக்கிலிடப்பட்டுள்ளது. காப்புறுதிக் கட்டணத்தை நிர்வாகச் செலவாகக் கருதுவது கம்பனியின் கொள்கையாகும்.

(iv) கம்பனியின் வேலை கொள்வோர், ஊழியர் என்போருக்கான ஊ.சே.நி. பங்களிப்பானது முறையே 15%, 10% ஆகும். மேலும் வேலை கொள்வோர் ஊ.ந.நி. இற்கு 3% பங்களிப்புச் செய்கின்றனர். இக்கம்பனியானது நடைமுறையாண்டிற்கான இறுதி 3 மாதங்களிற்கு ஊ.சே.நி., ஊ.ந.நி. என்பவற்றிற்கு எதுவித ஏற்பாடுகளும் செய்யவில்லை. எவ்வாறாயினும் இறுதி 3 மாதங்களுக்கான ஊழியர்களது ஊ.சே.நி. பங்களிப்பு குறைத்துக்கொள்ளப்பட்டு செலுத்த வேண்டிய ஊ.சே.நி. கணக்கில் செலவில் பதியப்பட்டுள்ளது.

(v) நிலையான வைப்பிற்கான நடைமுறை ஆண்டிற்குரிய வட்டி இன்னும் பதிவிடப்படவில்லை.

(vi) ஆதனம், பொறி, உபகரணம் மற்றும் ஏனைய விபரங்கள் ஆகியவற்றின் உள்ளடக்கம் கீழே தரப்பட்டுள்ளது:

| **சொத்து** | **(ரூ.'000)** **கிரயம் 31.03.2014 இல் உள்ளவாறு** | **திரண்ட பெறுமானத்தேய்வு 01.04.2013 இல் உள்ளவாறு** | **பயன்தரும் ஆயுட் காலம் (வருடங்களில்)** |
|---|---|---|---|
| கட்டடம் | 6 000 | 1 500 | 20 |
| மோட்டார் வாகனம் (01.04.2013 இல் நிதிக் குத்தகையின் கீழ் பெறப்பட்டது) | 4 000 | - | ? |
| அலுவலக உபகரணங்கள் | 1 200 | 240 | 5 |
| தளபாடங்களும் பொருத்துகளும் | 800 | 320 | 5 |
| | **12 000** | **2 060** | |

மோட்டார் வாகனமானது பொருட்களை விநியோகம் செய்வதற்காகப் பயன்படுத்தப்படுகிறது. மற்றைய எல்லாச் சொத்துகளும் நிர்வாக நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்படுகின்றன. நடைமுறையாண்டுக்கான பெறுமானத்தேய்வு இடப்படல் வேண்டும்.

(vii) கட்டடம், அலுவலக உபகரணங்கள் ஆகியன 31.03.2014 இல் அதன் நியாய விலைகளில் முறையே ரூ. 4 800 000, ரூ. 600 000 என முதற் தடவையாக மீள்மதிப்பீடு செய்யப்பட்டன.

(viii) மோட்டார் வாகனம் 01.04.2013 இல் 4 வருட நிதிக் குத்தகையின் கீழ் கொள்வனவு செய்யப்பட்டது. இச்சொத்தின் பயன்தரு ஆயுட்காலம் 6 வ ருடங்களாகும். சொத்தின் உரிமையானது நிதிக் குத்தகையின் இறுதியில் குத்தகை எடுத்தோருக்கு வழங்கப்படுவதில்லை. இக்குத்தகை உடன்படிக்கையின் கீழ் ஆரம்ப கொடுப்பனவு ரூ. 960 000 செலுத்தப்படல் வேண்டும். மேலும், வருடாந்த குத்தகை தவணைக்கட்டணம் ரூ. 960 000 ஐ 31.03.2014 இலிருந்து ஒவ்வொரு வருட முடிவிலும் செலுத்துதல் வேண்டும். 4 வருடங்களுக்கான குத்தகை வட்டி பின்வருமாறு:

| **வருடம்** | **வட்டி (ரூ.'000)** |
|---|---|
| 2013 / 14 | 304 |
| 2014 / 15 | 238 |
| 2015 / 16 | 166 |
| 2016 / 17 | 92 |

ஆரம்ப குத்தகைப் பொறுப்பும் ஆரம்ப கொடுப்பனவும் சரியாகப் பதியப்பட்டுள்ளன. மேலும் நடைமுறையாண்டுக்கான தவணைக்கட்டணம் செலுத்தப்பட்டுள்ளதுடன் இது இவ்வருடத்திற்கான குத்தகை வட்டியாகப் பதியப்பட்டுள்ளது.

(ix) நடைமுறை ஆண்டிற்கான வருமானவரியானது, வரிக்கு முன்னரான இலாபத்தின் 1/3 பங்கு என மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

(x) கம்பனியானது 31.03.2014 இல் நிறுத்திவைத்த வருவாய்களிலிருந்து ரூ. 1 000 000 இனை பொது ஒதுக்கத்திற்கு மாற்றுவதற்குத் தீர்மானித்துள்ளதுடன் இத்தினத்தில் இயக்குனர்கள் ரூ. 300 000 இனை கம்பனியின் சாதாரண பங்குதாரர்களுக்கான பங்கிலாபமாக முன்மொழிந்துள்ளனர்.

**வேண்டப்படுவது :**

வரையறுத்த அரவிந் பொதுக்கம்பனி பிரசுரிப்பதற்கான பின்வரும் நிதிக் கூற்றுகள் (குறிப்புக்கள் உட்பட):

(1) 31.03.2014 இல் முடிவடையும் வருடத்திற்கான முற்றுமடங்கிய (comprehensive) வருமானக் கூற்று
(2) 31.03.2014 இல் முடிவடையும் வருடத்திற்கான உரிமையாண்மை மாற்றல் கூற்று
(3) 31.03.2014 இல் உள்ளவாறான நிதி நிலைமைக் கூற்று **(20 புள்ளிகள்)**

**விடைகள்**
**வினா இலக்கம் 01**

(1)

**வரையறுத்த அரவிந் பொதுக்கம்பனி**
**31.03.2014ல் முடிவடைந்த ஆண்டிற்கான**
**முற்றுமடங்கிய வருமானக்கூற்று**

(ரூ.'000)

| | குறிப்பு | | | |
|---|---|---|---|---|
| விற்பனை | | | 12 500 | |
| விற்பனைக் கிரயம் | | | (7 000) | (01) |
| மொத்தலாபம் | | | 5 500 | |
| பிறதொழிற்பாட்டு வருமானங்கள் | 01 | | 80 | (01) |
| விநியோகக் கிரணம் | | 1 490 (03) | | |
| நிர்வாகச் செலவுகள் | | 2 536 (04) | | |
| பிறதொழிற்பாட்டுச் செலவுகள் | | 320 (02) | | |
| நிதிச் செலவுகள் | | 304 (01) | (4 650) | |
| வரி கழிக்குமுன் செயற்பாட்டு இலாபம் | 02 | | 930 | |
| ஆண்டுக்கான வருமான வரி | | (01) | (310) | |
| ஆண்டுக்கான இலாபம் | | | 620 | |
| **ஏனைய முற்றும் அடங்கிய வருமானம்** | | | | |
| கட்டட மீள்மதிப்பீட்டு மிகை | | | 600 | (01) |
| ஆண்டுக்கான மொத்த முற்றும் அடங்கிய வருமானம் | (01) | | 1 220 | |

குறிப்பு 01 :- பிற தொழிற்பாட்டு வருமானம் (ரூ. 000)
நிலையான வைப்பு வட்டி 80

குறிப்பு 02 :-
வரிக்கு முன் இலாபம் பின்வரும் செலவுகள் கழித்தபின் :

| | | (ரூ.'000) |
|---|---|---|
| ஊழியர் சேமலாப நிதிச்செலவு (EPF) | (02) | 180 |
| ஊழியர் நம்பிக்கை நிதிச்செலவு (ETF) | | 36 |
| தேய்வு (300 + 1000 + 240 + 160) | | 1 700 |
| குத்தகை வட்டி | | 304 |
| இருப்பு பெறுமதி வீழ்ச்சி நட்டம் | | 200 |
| அலுவலக உபகரண மீள்மதிப்பு நட்டம் | | 120 |

**(18 புள்ளிகள்)**

**செய்கை :**

**விற்பனைக் கிரயம்** (ரூ.'000)

| | |
|---|---|
| 2013.04.01 இருப்பு | 400 |
| கொள்வனவு | 1 500 |
| 2014.03.31 இருப்பு | (2 000) (01) |
| | 7 000 |

**விநியோகக் கிரணம் (ரூ.'000)**

| | |
|---|---|
| அறவிடமுடியாக்கடன் | 400 (01) |
| ஐயக்கடன் | 40 (01) |
| மோட்டார் பெறுமானத்தேய்வு | 1 000 (01) |
| மோட்டார்வாகன எரிபொருள் செலவு | 50 |
| | 1 490 |

**நிர்வாகச் செலவுகள் (ரூ.'000)**

| | |
|---|---|
| காப்புறுதி | 420 |
| ஊழியர் சேமலாப நிதிச்செலவு | 180 |
| ஊழியர் நம்பிக்கை நிதிச்செலவு | 36 |
| சம்பளங்கள் | 1 200 |
| கட்டட பெறுமானத் தேய்வு | 300 |
| அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு | 240 |
| தளபாட பெறுமானத்தேய்வு | 160 |
| | 2 536 |

**இரு விடயங்களுக்கு 1 புள்ளி வீதம் 4 புள்ளிகள்** (04)

**பிறதொழிற்பாட்டு செலவுகள் (ரூ.'000)**

| | |
|---|---|
| இருப்பு பெறுமதி வீழ்ச்சி | 200 (01) |
| அலுவலக உப. மீள்மதிப்பீட்டு குறை நட்டம் | 120 (01) |
| | 320 |

**நிதிச்செலவு (ரூ.'000)**

| | |
|---|---|
| குத்தகை வட்டி | 304 (01) |

(2)

வரையறுத்த அரவிந் பொதுக்கம்பனியின்
31/3/2014ல் முடிவடைந்த ஆண்டிற்கான
உரிமையாண்மை மாற்றக் கூற்று

(ரூ.'000)

| | கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | மீள் மதிப்பீட்டு ஒதுக்கம் | பொது ஒதுக்கம் | நிறுத்தி வைத்த வருவாய் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 2013.04.01 மீதி | 9 000 | - | 1 250 | 1 040 | 11 290 |
| மொ. முற்றும் அடங்கிய வரு. | - | (01) 600 | - | (01) 620 | 1 220 |
| பொது ஒதுக்கத்திற்கு மாற்றம் | - | - | 1 000 | (1 000) (01) | - |
| 2014.03.31 ல் மீதி | 9 000 | 600 | 2 250 | 660 | 12 510 |

**(03 புள்ளிகள்)**

(3) வரையறுத்த அரவிந் பொதுக்கம்பனி

31/03/2014 இல் உள்ளவாறான

நிதி நிலைமைக்கூற்று (01)

| | குறிப்பு | ரூ.'000 | ரூ.'000 |
|---|---|---|---|
| **நடைமுறை அல்லாத சொத்துக்கள்** | | | |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் | 03 | (01) | 8 720 |
| நிலையான வைப்பு | | | 1 600 |
| | | | 10 320 |
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | | |
| இறுதிச் சரக்கிருப்பு | | 1 800 (01) | |
| வியாபார வருமதிகள் | | 3 240 (01) | |
| முற்பண காப்புறுதி | | 420 (01) | |
| பெறவேண்டிய நிலையான வைப்பு வட்டி | | 80 (01) | |
| காசும் காசுக்கு சமமானவை | 04 | 1 638 (01) | 7 178 |
| **மொத்த வருமானம்** | | | 17 498 |
| **உரிமையாண்மையும் பொறுப்புக்களும்** | | | |
| **கூறப்பட்ட பங்கு மூலதனம்** | | | |
| சாதாரண பங்குகள் | | | 9 000 (01) |
| **ஒதுக்கங்கள்** | | | |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் | | 600 | |
| பொது ஒதுக்கம் | (01) | 2 250 | |
| நிறுத்திவைத்த வருவாய் | | 660 | 3 510 |
| | | | 12 510 |
| **நடைமுறை அல்லாத பொறுப்பு** | | | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | | 1 662 (01) |
| **நடைமுறைப் பொறுப்புக்கள்** | | | |
| வியாபார கொடுக்குமதிகள் | | 2 500 | |
| செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாபநிதி | | 75 } (01) | |
| செலுத்தவேண்டிய ஊழியர்கள் நம்பிக்கை நிதி | | 9 } | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 722 (01) | |
| வருமான வரி ஏற்பாடு | | (01) 20 | 3 326 |
| | | | 17 498 |

குறிப்பு 03 - ஆதனம் பொறி உபகரணம்

(ரூ.'000)

| | கட்டடம் | மோட்டார் வாகனம் | அலுவலக உபகரணம் | தளபாட. பொருத்து. | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| **கிரயம்** | | | | | |
| 2013.04.01 ல் மீதி | 6 000 | - | 1 200 | 800 | 8 000 |
| மீள் மதிப்பீடு (01) | 600 | | (120) | | 480 |
| பெறுமானத் தேய்வு ஏற்பாடு | (1 800) | | (480) | | (2 280) |
| இவ்வாண்டு சேர்ப்பு | | 4 000 (01) | | | 4 000 |
| 2014.03.31 ல் மீதி | 4 800 | 4 000 | 600 | 800 | 10 200 |
| **பெறுமானத் தேய்வு ஏற்பாடு** | | | | | |
| 2013.04.01 ல் மீதி | 1 500 | - | 240 | 320 | 2 060 |
| இவ்வாண்டுத் தேய்வு (02) | 300 | 1 000 | 240 | 160 | 1 700 |
| அகற்றிய தேய்வு | (01) (1 800) | | (480) | | (2 280) |
| 2014.03.31 ல் மீதி | - | 1 000 | - | 480 | 1 480 |
| 2013.03.31 ல் கொண்டுசெல் தொகை | 4 800 | 3 000 | 600 | 320 | 8 720 |

வருடத்தினுள் கட்டடம் ரூபா 4 800 000 இற்கும், காரியாலய உபகரணங்கள் ரூபா 600 000 இற்கும் மீள்மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. கட்டட மீள்மதிப்பீட்டில் ரூபா 600 000 மிகையும், காரியாலய உபகரண மீள்மதிப்பீட்டில் ரூபா 120 000 குறைவும் ஏற்பட்டுள்ளது.

**குறிப்ப 04 -** காசும் காசுக்கு சமனானவை (ரூ.'000)

| | |
|---|---|
| திறைசேரி உண்டியல்கள் | 800 |
| வங்கியிலுள்ள காசு | 838 |
| | 1 638 |

**குறிப்பு 05 -** ரூ. 300 000 இனை கம்பனியின் சாதாரண பங்குதாரர்களுக்கான பங்கிலாபமாக முன்மொழிந்துள்ளனர். (01)

**(19 புள்ளிகள்)**

**(மொத்தம் 40 புள்ளிகள்)**

**1 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு புள்ளிகள் ஒதுக்கப்பட்டுள்ள முறை 20 x 2 = 40 ஆகும்.
1ம் வினா கட்டாய வினாவாகும். இதற்கு விண்ணப்பதாரிகளில் ஒரு சிறிய பிரிவினர் தவிர்ந்த ஏனையோர் இவ்வினாவிற்கு விடையளித்துள்ளனர். இவ்வினாவிற்கு ஒதுக்கப்பட்ட புள்ளிகள் 40 ஆகும்.

அதில் 00 - 10 புள்ளி ஆயிடையில் 39% ம்,
11 - 20 புள்ளி ஆயிடையில் 31% ம்,
21 - 30 புள்ளி ஆயிடையில் 22% ம்,
31 - 40 புள்ளி ஆயிடையில் 8% ம்,

என்றவாறு புள்ளிகள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவ்வினாவிற்கு 31 புள்ளிகள் அல்லது அதற்கும் மேலாக புள்ளிகளைப் பெற்றவர்களின் தொகை 8% ஆக இருந்ததுடன், விண்ணப்பதாரிகளின் 39% மானோர் 10 புள்ளிகள் அல்லது அதனை விடவும் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 3 உபபிரிவுகள் காணப்படுவதுடன், அம்மூன்று உபபிரிவுகளினதும் இலகுதன்மை 35% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை குறைவான உபபகுதியாக (3) இருப்பதுடன், அதன் இலகுதன்மை 38% மாகும். இலகுதன்மை கூடிய உபபிரிவாக (2) இருப்பதுடன், அதன் இலகுதன்மை 43% ஆகும்.

பகுதி (2) இன் இலகுதன்மை 43% ஆக இருப்பதுடன், மொத்த விரிவான வருமானத்தை தனி நிறையில் மீள் மதிப்பீட்டு ஒதுக்கத்திற்கும் மற்றும் நிறுத்தி வைத்த உழைப்பு நிரலுக்கு கொண்டு செல்லாமையே இதற்கு காரணமாகும். கம்பனியின் நிதிக் கூற்றினைத் தயாரிக்கும்போது அதற்குரிய கணக்கீட்டு நியமங்கள் தொடர்பான விளக்கம் கீழ்மட்டத்தில் காணப்படுவதனால் அந்நியமங்கள் தொடர்பில் சிறப்பாக விளக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

பகுதி (3) இல் நிதி நிலமைக் கூற்றின் குத்தகை நியமம் (LKAS 17) தொடர்பான விளக்கமும் மற்றும் ஆதனம் பொறி மற்றும் உபகரணம் (LKAS 16) நியமம் தொடர்பான விளக்கமும் குறைவான மட்டத்தில் காணப்பட்டமையினால் குத்தகை ஆதனத் தேய்வு மற்றும் மீள்மதிப்பீடு என்பவை கணக்குகளில் பதிவு செய்யப்படவில்லை. இந்நியமம் தொடர்பான அறிவினை கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாக பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

02 ஆம் வினா

**2.** **(அ)** 31.03.2013 இல் உள்ளவாறான நகுலேஸ், விஸ்வா, சந்துரு என்பவர்களது பங்குடைமையின் சுருக்கிய நிதி நிலைமைக் கூற்று கீழே தரப்பட்டுள்ளது.

| **சொத்துக்கள்:** | **(ரூ.'000)** |
|---|---|
| கொண்டு செல் தொகையில் ஆதனம், பொறி மற்றும் உபகரணம் | 6000 |
| இருப்புக்கள் | 1 000 |
| வியாபார வருமதிகள் (வியாபாரக் கடன்பட்டோர்) | 1 500 |
| வங்கியிலுள்ள காசு | 500 |
| | **9 000** |
| **உரிமையாண்மையும் பொறுப்புக்களும்:** | |
| *மூலதனக் கணக்குகள்:* | |
| நகுலேஸ் | 3 000 |
| விஸ்வா | 3 000 |
| சந்துரு | 2 000 |
| *நடைமுறைக் கணக்குகள்:* | |
| நகுலேஸ் | 350 |
| விஸ்வா | 330 |
| சந்துரு | 80 |
| வியாபாரக் கொடுக்குமதிகள் (வியாபாரக் கடன்கொடுத்தோர்) | 240 |
| | **9 000** |

**மேலதிக தகவல்கள்:**

(i) நகுலேஸ், விஸ்வா, சந்துரு என்பவர்களது பங்குடமை உடன்படிக்கை பின்வருமாறு:
- இலாபநட்டங்கள் நகுலேஸ், விஸ்வா, சந்துரு ஆகியோர்களுக்கிடையில் முறையே 3:2:1 எனும் விகிதத்தில் பகிர்வு செய்யப்படும்.
- ஒவ்வொரு பங்காளரும் மாதச் சம்பளமாக ரூ. 10 000 பெறுவதற்கு உரித்துடையவர்கள்.
- பங்காளர்கள் தங்களது மூலதனக் கணக்கின் ஆரம்ப மீதிகளுக்கு 5% வட்டி பெறுவதற்கு உரித்துடையவராவர்.

(ii) 01.04.2013 இல் நகுலேஸ் பங்குடைமையிலிருந்து இளைப்பாறினார். இத்தினத்தில் அவருக்குக் கொடுத்துத் தீர்க்க வேண்டிய தொகையை கடன் கணக்கிற்கு மாற்றுவதற்கும் அதற்கு வருடாந்தம் 10% வட்டி செலுத்துவதற்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. நடைமுறை ஆண்டுக்கான வட்டி செலுத்தப்படல் வேண்டும்.

(iii) 01.04.2013 இல் பங்குடைமையின் நன்மதிப்பானது ரூ. 900 000 என மதிப்பீடு செய்யப்பட்டது. நன்மதிப்பானது கணக்குப் புத்தங்களில் ஒரு சொத்தாக பதியப்படுவதில்லை. அத்துடன் நன்மதிப்பு தொடர்பான எல்லாச் சீராக்கங்களும் பங்காளர்களின் மூலதனக் கணக்குகள் ஊடாக மேற்கொள்ளப்பட வேண்டும்.

(iv) 01.04.2013 இலிருந்து விஸ்வாவும் சந்துருவும் இலாப நட்டத்தை முறையே 2:1 எனும் விகிதத்தில் பகிர்வு செய்து பங்குடமையை தொடர்ந்து நடாத்தத் தீர்மானித்தனர். சம்பளம், மூலதன வட்டி தொடர்பாக ஏற்கனவே செய்த உடன்படிக்கையில் மாற்றம் எதுவுமில்லை.

(v) 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான விஸ்வா, சந்துரு ஆகியோரின் பங்குடமையின் கொடுக்கல் வாங்கல்கள் தொடர்பான சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது:

| **விபரம்** | **ரூ.'000** |
|---|---|
| விற்பனைகள் (இவற்றுள் 60% கடனடிப்படையிலானதாகும்) | 6000 |
| கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்ட காசு ........................... | 2 500 |
| கொள்வனவுகள் (இவற்றுள் 80% கடனடிப்படையிலானதாகும்) | 3 000 |
| கடன்கொடுத்தோருக்கான கொடுப்பனவு .......................... | 1 240 |
| செயற்பாட்டுச் செலவுகளுக்குச் செலுத்திய காசு ............. | 520 |
| ஆதனம், பொறி, உபகரண பெறுமானத் தேய்வு ............... | 1 000 |
| பற்றுக்கள் (ஒவ்வொரு பங்காளரும் ரூ. 60 000 வீதம்)....... | 120 |

(vi) 31.03.2014 இல் உள்ளவாறான சரக்கிருப்புகளின் பெறுமதி 750 000 ஆகும்.

**வேண்டப்படுவது:**

(1) விஸ்வா, சந்துரு என்பவர்களது பங்குடமையின் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானக் கூற்று (பங்காளர்களுக்கான பகிர்வுகள் உட்பட)

(2) விஸ்வா, சந்துரு பங்குடைமையின் வியாபார வருமதிகள், பொறுப்புக்கள், பங்காளர்களின் மூலதன, நடைமுறைக் கணக்குகள் ஆகிய மீதிகளைக் காட்டும் 31.03.2014 இல் உள்ளவாறான பிரித்தெடுக்கப்பட்ட நிதிநிலைமைக் கூற்று **(10 புள்ளிகள்)**

**(ஆ)** வரையறுக்கப்பட்ட ரொசான் கம்பனி இரு வகையான பேனைகளை (வகை 1, வகை 2) உற்பத்தி செய்கின்றது. இது மூன்று உற்பத்தி திணைக்களங்களை (இயந்திரம், ஒன்றுசேர்த்தல், முடிவுறுத்தல்) கொண்ட தொழிற்சாலையையும் மற்றும் களஞ்சியமொன்றையும் கொண்டுள்ளது. இவை இரண்டும் தனித்தனியான கட்டடங்களில் அமைந்துள்ளன. 2015ஆம் ஆண்டுக்கான பாதீடு செய்யப்பட்ட மேந்தலைகள் பின்வருமாறு:

| **மேந்தலைகள்:** | **ரு.'000** |
|---|---|
| *நேரில் கூலிகள்:* | |
| இயந்திர திணைக்களம் | 310 |
| ஒன்றுசேர்த்தல் திணைக்களம் | 630 |
| முடிவுறுத்தல் திணைக்களம் | 140 |
| களஞ்சியம் | 180 |
| *வாடகை:* | |
| தொழிற்சாலை | 1 600 |
| களஞ்சியம் | 400 |
| *வெளிச்சம் பாய்ச்சல்:* | |
| தொழிற்சாலை | 600 |
| களஞ்சியம் | 140 |
| இயந்திர திணைக்களத்திற்கான இயந்திர எண்ணெய் | 300 |
| இயந்திரப் பெறுமானத் தேய்வு | 1 200 |
| காப்புறுதி - களஞ்சியம் | 500 |
| பாதுகாப்புக் கட்டணங்கள் | 300 |

**மேலதிக தகவல்கள்:**

(i)

| **விடயங்கள்** | **இயந்திரம்** | **ஒன்றுசேர்த்தல்** | **முடிவுறுத்தல்** | **களஞ்சியம்** |
|---|---|---|---|---|
| பாதுகாப்பு உத்தியோகத்தர்களின் எண்ணிக்கை | 10 | 12 | 6 | 2 |
| தளப்பரப்பு (சதுரமீற்றர்) | 3 600 | 2 800 | 1 600 | 200 |
| இயந்திரக் கிரயம் (ரு. '000) | 500 | 600 | 200 | 200 |
| நேர் ஊழிய மணித்தியாலங்களின் எண்ணிக்கை | 200 | 484 | 270 | - |
| இயந்திர மணித்தியாலங்களின் எண்ணிக்கை | 400 | 70 | 180 | - |
| களஞ்சிய வேண்டுதல்கள் எண்ணிக்கை | 25 | 15 | 10 | - |

(ii) மேந்தலைகள் உறிஞ்சுதலுக்காக இயந்திர திணைக்களமானது இயந்திர மணித்தியாலங்களையும், ஏனைய இரண்டு உற்பத்தித் திணைக்களங்களும் நேர் ஊழிய மணித்தியாலங்களையும் பயன்படுத்துகின்றன.

(iii) பேனை ஒன்றை உற்பத்தி செய்வதற்கான பாதீடு செய்யப்பட்ட மணித்தியாலங்கள்

| **திணைக்களம்** | **வகை 1** | **வகை 2** |
|---|---|---|
| இயந்திரம் | 4 | 3 |
| ஒன்றுசேர்த்தல் | 3 | 5 |
| முடிவுறுத்தல் | 2 | 4 |

**வேண்டப்படுவது :**

(1) பகிர்வு அடிப்படையை காட்டக்கூடியதான மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை (களஞ்சியத்தின் மீள்பகிர்வு உட்பட)

(2) உற்பத்தித் திணைக்களம் ஒவ்வொன்றுக்குமான மேந்தலை உறுஞ்சுதல் வீதங்கள்

(3) ஒவ்வொரு உற்பத்தி வகை பொருளினதும் அலகொன்றினால் உறிஞ்சப்பட்ட மேந்தலைகள்

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 20 புள்ளிகள்)**

**விடை**

**வினா இலக்கம் 02**

(அ) (1)

விஸ்வா சந்துரு பங்குடமையின்
31/03/2014ல் முடிவடைந்த ஆண்டிற்கான
வருமானக் கூற்று

(ரூ.'000)

| | | |
|---|---|---|
| விற்பனை | | (01) 6 000 |
| விற்பனைக் கிரயம் : | | |
| ஆரம்ப இருப்பு | 1 000 | |
| கொள்வனவு | 3 000 (01) | |
| இறுதி இருப்பு | (750) | (3 250) |
| மொத்த இலாபம் | | (01) 2 750 |
| செயற்பாட்டுச் செலவுகள் | 520 | |
| பெறுமானத் தேய்வு | 1 000 (01) | |
| நகுலேஸ் கடன் வட்டி | 380 (01) | (1 900) |
| ஆண்டுக்கான இலாபம் | | (01) 850 |
| மூலதன வட்டி - விஸ்வா | 150 } (01) | |
| சந்துரு | 100 } | (250) |
| சம்பளம் - விஸ்வா | 120 } (01) | |
| சந்துரு | 120 } | (240) |
| இலாபப்பகிர்வு - விஸ்வா | (01) { 240 | |
| சந்துரு | 120 | (360) |

**(09 புள்ளிகள்)**

(2)

விஸ்வா, சந்துரு பங்குடமையின்
31.03.2014ல் உள்ளவாறான பெயர்த்தெடுக்கப்பட்ட
நிதி நிலைமைக் கூற்று

(ரூ.'000)

| | | |
|---|---|---|
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | |
| வியாபார வருமதிகள் | | 2 600 (01) |
| **உரிமையாண்மை** | | |
| பங்காளர் மூலதனம் - விஸ்வா | 2 700 (01) | |
| சந்துரு | 1 850 (01) | 4 550 |
| நடைமுறை கணக்கு - விஸ்வா | 780 (02) | |
| சந்துரு | 360 (02) | 1 140 |
| **நடைமுறை அல்லாத பொறுப்புகள்** | | 3 800 (02) |
| நகுலேஸ் கடன் | | |
| **நடைமுறைப் பொறுப்புகள்** | | |
| வியாபாரக் கொடுக்குமதிகள் | 1 400 (01) | |
| அட்டுறு நகுலேஸ் கடன்வட்டி | (01) 380 | 1 780 |

**(09 புள்ளிகள்)**

**செய்கை :**

பங்காளர் மூலதனக் கணக்கு

(ரூ.'000)

| | நகுலேஸ் | விஸ்வா | சந்துரு | | நகுலேஸ் | விஸ்வா | சந்துரு |
|---|---|---|---|---|---|---|---|
| நன்மதிப்பு | - | 600 | 300 | மீதி | 3 000 | 3 000 | 2 000 |
| நகுலேஸ் கடன் | 3 800 | - | (01) | நன்மதிப்பு | 450 | 300 | 150 |
| மீதி கீ/கொ/செ | - | 2 700 | 1 850 | நடைமுறைக்கணக்கு | 350 | (01) | - |
| | 3 800 | 3 300 | 2 150 | | 3 800 | 3 300 | 2 150 |

பங்காளர் நடைமுறைக் கணக்கு

(ரூ.'000)

| | நகுலேஸ் | விஸ்வா | சந்துரு | | நகுலேஸ் | விஸ்வா | சந்துரு |
|---|---|---|---|---|---|---|---|
| பற்றுக்கள் | - | 60 | 60 | மீதி | 350 | 330 | 80 |
| மூலதனக் கணக்கு | 350 | | (01) | மூலதன வட்டி | (01) | 150 | 100 |
| மீதி கீ/கொ/செ | - | 780 | 360 | பங்காளர் சம்பளம் | (01) | 120 | 120 |
| | | | | இலாபம் | (01) | 240 | 120 |
| | 350 | 840 | 420 | | 350 | 840 | 420 |

வியாபார வருமதிகள் கணக்கு (ரூ.000)

| | | | |
|---|---|---|---|
| காசு | 1 240 | மீதி. வ | 240 |
| மீதி கீ/கொ/செ | 1 400 | கொள்வனவு | 2 400 (01) |
| | 2 640 | | 2 640 |

வியாபார கொடுக்குமதிகள் கணக்கு (ரூ.000)

| | | | |
|---|---|---|---|
| மீ.வ | 1 500 | காசு | 2 500 |
| விற்பனை | 3 600 (01) | மீதி கீ/கொ/செ | 2 600 |
| | 5 100 | | 5 100 |

(ஆ) (1) வரையறுக்கப்பட்ட ரொஷான் பொதுக்கம்பனி

மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை

(ரூ.'000)

| கிரய உருப்படி | பகிர்வின் அடிப்படை | மொத்தம் | உற்பத்தித் திணைக்களம் | | | சேவை திணைக்களம் |
|---|---|---|---|---|---|---|
| | | | இயந்திரம் | ஒன்று சேர்த்தல் | முடிவுறுத்தல் | களஞ்சியம் |
| நேரில் கூலிகள் | நேரடி ஒதுக்கீடு | 1 260 | 310 | 630 | 140 | 180 (01) |
| வாடகை | நேரடி ஒதுக்கீடு | 400 | | | | 400 |
| வெளிச்சம் பாய்ச்சல் | நேரடி ஒதுக்கீடு | 140 | | | | 140 (02) |
| இயந்திர எண்ணெய் | நேரடி ஒதுக்கீடு | 300 | 300 | | | |
| காப்புறுதி | நேரடி ஒதுக்கீடு | 500 | | | | 500 |
| வாடகை தொழிற்சாலை | தளப்பமரப்பு (01) (9 : 7 : 4) | 1 600 | 720 | 560 | 320 | |
| வெளிச்சல் பாய்ச்சல் தொழிற்சாலை | தளப்பமரப்பு (01) (9 : 7 : 4) | 600 | 270 | 210 | 120 | |
| இயந்திர தேய்வு | இயந்திர கிரயம் (01) (5 : 6 : 2 : 2) | 1 200 | 400 | 480 | 160 | 160 (01) |
| பாதுகாப்பு கட்டணம் | பாதுகாப்பு உத்தியோகத்தர் (01) எண்ணிக்கை (5 : 6 : 3 : 1) | 300 | 100 | 120 | 60 | 20 (01) |
| | | 6 300 | 2 100 | 2 000 | 800 | 1 400 |
| களஞ்சியம் செலவு | களஞ்சிய வேண்டுதல்களின் (01) எண்ணிக்கை (5 : 3 : 2) | | (01) 700 | 420 | 280 | (1 400) |
| | | 6 300 | 2 800 | 2 420 | 1 080 | - |

**(13 புள்ளிகள்)**

(ரூ.'000)

(2)

| | இயந்திரம் | ஒன்று சேர்த்தல் | முடிவுறுத்தல் |
|---|---|---|---|
| பொது மேந்தலைக் கிரயம் உள்ளடக்க விகிதம் : | இயந்திர மணிக்கு ரூ. 7 (01) | ஊழிய மணிக்கு ரூ. 5 (01) | ஊழிய மணிக்கு ரூ. 4 (01) |

முற்செய்கை :

| 2 800 / 400 (01) | 2 420 / 484 (01) | 1 080 / 270 (01) |
|---|---|---|
| ரூ. 7 | ரூ. 5 | ரூ. 4 |

**(03 புள்ளிகள்)**

(3) உற்பத்தி வகை 1 (ரூ.'000) 51 (02)    உற்பத்தி வகை 2 (ரூ.'000) 62 (02)

**செய்கை :**

| வகை 1 | (ரூ.'000) | | வகை 2 | (ரூ.'000) | |
|---|---|---|---|---|---|
| இயந்திரம் | 4 x 7 | 28 | இயந்திரம் | 3 x 7 | 21 |
| ஒன்று சேர்த்தல் | 3 x 5 | 15 | ஒன்று சேர்த்தல் | 5 x 5 | 25 |
| முடிவுறுத்தல் | 2 x 4 | 8 | முடிவுறுத்தல் | 4 x 4 | 16 |
| | | 51 (02) | | | 62 (02) |

**(04 புள்ளிகள்)**
**(மொத்தம் 40 புள்ளிகள்)**

**2 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 20 x 2 = 40 ஆகும்.
2ம் வினா கட்டாய வினாவாயினும் அதற்கு விண்ணப்பதாரிகளின் 97% மானோர் மாத்திரமே விடையளித்துள்ளனர்.
அதில் 00 - 10 புள்ளி ஆயிடையில் 29% ம்,
11 - 20 புள்ளி ஆயிடையில் 28% ம்,
21 - 30 புள்ளி ஆயிடையில் 22% ம்,
31 - 40 புள்ளி ஆயிடையில் 21% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப 31 புள்ளிகளை விடக் கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் விண்ணப்பதாரிகளில் 21% மாக இருந்ததுடன், விண்ணப்பதாரிகளின் 29% மானோர் 10 அல்லது அதை விடவும் குறைவாகவே பெற்றுள்ளனர்.




உபபிரிவுகள் 05 இனைக் கொண்டுள்ள இவ்வினாவில் இலகுதன்மை 33% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை கூடுதலான உபபகுதி (அ) (1) ஆகும். அதன் இலகுதன்மை 61% மாகும். இலகுதன்மை குறைவான உபபிரிவு (ஆ) (3) ஆகும். அதன் இலகுதன்மை 33% மாகும்.

2 ஆம் வினாவின் (அ) (1) பகுதியின் இலகுதன்மை 61% ஆகும். கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு, மட்டும் கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு என்பவற்றினூடாக வருடத்தின் கொள்வனவு விற்பனைகளை சரியாகக் கணிப்பிட முடியாமை, பங்காளர் ஒருவர் ஓய்வு பெற்று செல்கின்றபோது அவருக்கு செலுத்த வேண்டிய உரிமையானது கடன் கணக்கிற்கு மாற்றப்பட்டாலும் அதற்குச் செலுத்த வேண்டிய 10% வட்டியானது சீராக்கப்படாமை போன்ற குறைபாடுகள் இங்கு இடம் பெற்றிருந்தன.

(அ) 2 பகுதியின் இலகுதன்மை 55% ஆகும். நிதி நிலமைக் கூற்றில் வியாபாரம் செலுத்த வேண்டியவைகள், நுவனின் கடன் கணக்கின் மீதி என்பன சரியாகக் கணிப்பிடப்படாமை மற்றும் அவற்றை நிதி நிலமைக் கூற்றில் நடைமுறை அல்லாத பொறுப்பின் கீழ் காட்டாமை போன்ற பொதுவான குறைபாடுகளை விண்ணப்பதாரிகள் செய்திருந்தார்கள்.

பங்குடமை வணிகமொன்றின், வருமானக் கூற்று நிதி நிலமைக் கூற்று என்பவற்றைத் தயாரிக்கும்போது பங்காளர் ஒருவர் ஓய்வு பெற்றுச் செல்லும்பொது அவரின் உரிமையினைக் கடன் கணக்கிற்கு மாற்றுதல் மற்றும் வட்டியினைச் சீராக்குதல் போன்ற விடயங்கள் விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன் முறைகள் ஒழுங்குபடுத்தப்படல் முக்கியமானதாகும்.

(ஆ) 1 பகுதியின் இலகுதன்மை 55% ஆகும். பொது மேந்தலைக் கிரயத்தை சரியான அடிப்படையின் கீழ் கிரய மத்திய நிலையங்களுக்கிடையில் பகிர்வு செய்வது தொடர்பான விளக்கம் சில மாணவர்களிடம் காணப்படவில்லை.

பகுதி 2 இன் இலகுதன்மை 50%ஆகும். உற்பத்தி மத்திய நிலையங்களின் பொது மேந்தலைக் கிரய உள்ளடக்க வீதத்தைக் கணிப்பிடுவதிலுள்ள அறிவு பலவீனமான மட்டத்தில் காணப்பட்டது.

பகுதி 3 இன் இலகுதன்மை 33% ஆகும். 1 ஆவது 2 ஆவது வகை பொருட்களின் அலகொன்றின் உற்பத்திக் கிரயத்தை கணிப்பிடல், பொது மேந்தலைக் கிரய உள்ளடக்க வீதத்தைக் கணிப்பிட்டிருக்காமை, கணிப்பிடப்பட்ட உள்ளடக்க வீதத்தை சரியான மணித்தியாலத்திற்கு ஏற்ப கணிப்பிடாமை போன்ற பலவீனங்களைக் காணக்கூடியதாக இருந்தது.

சேவைத் திணைக்களத்தின் பொது மேந்தலைக் கிரயமானது நேரடியாகப் பகிரப்பட்டு வேறுபடுத்திக் காட்டப்பட்டிருந்தாலும் அது தொடர்பில் மாணவர்கள் சரியாக அறிந்திருக்கவில்லை. பொது மேந்தலைக் கிரயத்தை மத்திய நிலையங்களுக்கிடையில் சரியாகப் பகிரல், மீளப்பகிரல் உள்ளடக்க வீதத்தை ஒழுங்கமைத்தல் விகிதங்களின் அடிப்படையில் உள்ளீர்ப்பினை விளங்கிக் கொள்ளல் என்பவற்றை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

03 ஆம் வினா

**3**. இளங்கோ தனது சொந்த சேமிப்புகளைப் பயன்படுத்தி ரூ. 400 000 ஐ முதலீடு செய்து 01.01.2014 இல் வியாபாரமொன்றை ஆரம்பித்தார். மேலும் அவர் ரூ. 120 000 மதிப்பீடு செய்யப்பட்ட தனது கணினியையும் வியாபாரத்திற்காகப் பயன்படுத்தினார். 2014 ஜனவரி மாதத்தில் இடம்பெற்ற சில கொடுக்கல் வாங்கல்கள் கணக்கீட்டுச் சமன்பாட்டைப் பயன்படுத்தி பின்வருமாறு பதிவிடப்பட்டுள்ளன.

(எல்லாப் பெறுமதிகளும் ரூ. '000 இல் ஆகும்.)

| கொடுக்கல் வாங்கல் இலக்கம் | சொத்துக்கள் | | | | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|---|---|---|
| | தளபாடம் | சரக்கிருப்புகள் | கடன்பட்டோர் | வங்கி | | |
| 1 | | + 200 | | – 200 | | |
| 2 | | + 180 | | | + 180 | |
| 3 | + 180 | | | – 180 | | |
| 4 | | – 40 | | + 50 | | + 10 |
| 5 | | | | – 38 | – 40 | + 2 |
| 6 | | – 60 | + 100 | | | + 40 |
| 7 | | | – 60 | + 57 | | – 3 |
| 8 | | | | – 8 | | –8 |

**மேலதிக தகவல்கல்:**

(i) வியாபாரத்தின் எல்லாக் காசுக் கொடுக்கல் வாங்கல்களும் வங்கிக் கணக்கினூடாக மேற்கொள்ளப்படுகின்றன.

(ii) 31.01.2014 இலுள்ள வியாபாரத்தின் வங்கி மீதி இத்தினத்திலுள்ள வங்கிக் கூற்றிலுள்ள மீதியுடன் உடன்படவில்லை. இது தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட பரிசீலனையின்போது பின்வரும் விடயங்கள் கணக்குப் புத்தகங்களில் பதியப்படவில்லை எனத் தெரியவந்துள்ளது:

- இளங்கோவின் மகளின் பாடசாலைக் கட்டணத்தை செலுத்துவதற்காக வழங்கப்பட்ட ரூ. 10 000 இற்கான காசோலை (இளங்கோ இத்தொகையினை மட்டுமே இம்மாதத்தினுள் பற்றாக எடுத்துள்ளார்.)
- வியாபாரத்தின் தொலைபேசி கட்டணத்திற்கான நிலையான கட்டளைக் கொடுப்பனவு ரூ. 2 000
- கடன்பட்டோர் ஒருவரால் வங்கியில் நேரடியாக வைப்புச் செய்யப்பட்ட காசோலை ரூ. 30 000

(iii) வியாபாரத்தின் ஆதனம், பொறி, உபகரணம் என்பன நேர்கோட்டு முறையில் வருடாந்தம் 10% பெறுமானத் தேய்விடப்பட வேண்டும். இச்சொத்துக்கள் மாதத் தொடக்கத்திலிருந்து பாவனைக்குக் கிடைப்பனவாக இருந்தன.

(iv) நகர சபைக்குச் செலுத்த வேண்டிய 2014 ஜனவரி மாதத்திற்கான இறைவரி ரூ. 5 000 ஆகும்.

**வேண்டப்படுவது:**

(1) இலக்கம் 1 இலிருந்து 8 வரைக்குமான கொடுக்கல் வாங்கல்களை விவரித்தல்

(2) தேறிய சொத்து அடிப்படையைப் பயன்படுத்தி 2014 ஜனவரி மாதத்திற்கான வியாபாரத்தின் இலாபம் அல்லது நட்டம்

(3) 31.01.2014 இல் உள்ளவாறான வியாபாரத்தின் நிதி நிலைமைக் கூற்றில் காட்டப்பட வேண்டிய சரக்கிருப்பு. கடன்பட்டோர், வங்கி மீதிகள் **(மொத்தம் 15 புள்ளிகள்)**

**விடை**

**வினா இலக்கம் 03**

(1) (1) காசுக்கு பொருட்கள் கொள்வனவு ரூ. 200 000 (01)

(2) கடனுக்கு பொருட்கள் கொள்வனவு ரூ. 180 000 (01)

(3) காசுக்கு வாங்கிய தளபாடம் ரூ. 180 000 (01)

(4) ரூ. 40 000 கிரயமான பண்டங்கள் ரூ. 50 000 வுக்கு காசுக்கு விற்கப்பட்டன. (02)

(5) ரூ. 40 000 கடன்கொடுத்தோருக்கு கொடுத்த காசு ரூ. 38 000 பெற்றகழிவு ரூ. 2 000 (02)

(6) ரூ. 60 000 கிரயமான பண்டங்கள் ரூ. 100 000 வுக்கு கடனுக்கு விற்கப்பட்டன. (02)

(7) ரூ. 60 000 கடன்பட்டோரிடம் பெற்ற காசு ரூ. 3 000கொடுத்த கழிவு 57 000 (02)

(8) காசாகச் செலுத்திய செயற்பாட்டு செலவுகள் ரூ. 8 000 (01)

**(12 புள்ளிகள்)**

(2) தேறியலாபம் = இறுதி தேறிய சொத்து - ஆரம்ப தேறிய சொத்து + பற்றுக்கள்

ரூ. 31 500 = 541 500 (05) - 520 000 (02) + 10 000 (01)

**(08 புள்ளிகள்)**

| **செய்கை :** | ரூ. | |
|---|---|---|
| **ஆரம்ப தேறிய சொத்துக்கள்** | | |
| காசு | 400 000 | (01) |
| கணினி | 120 000 | (01) |
| | 520 000 | |
| **இறுதித் தேறிய சொத்துக்கள்** | | |
| ஆரம்ப தேறிய சொத்துக்கள் | 520 000 | |
| கொடுக்கல் வாங்கல்களினால் மாற்றம் (10 000+2 000+40 000-3 000-8 000) | 41 000 | (02) |
| தொலைபேசிக் கட்டணம் | (2 000) | (01) |
| தேய்வு | (2 500) | (01) |
| இறைவரி | (5 000) | (01) |
| மாதத்திற்கான பற்றுக்கள் | (10 000) | |
| | 541 500 | |

(3) சரக்கிருப்பு ரூ. 280 000 (02)

கடன்பட்டோர் ரூ. 10 000 (02)

வங்கி மீதி ரூ. 99 000 (06)

**(10 புள்ளிகள்)**

| **செய்கை :** | | |
|---|---|---|
| **கடன்பட்டோர்** | ரூ. | |
| கடன்பட்டோர் மீதி | 40 000 | (01) |
| இறுதி மீதி | (30 000) | (01) |
| | 10 000 | |

| **வங்கி மீதி கணக்கு** | ரூ. | |
|---|---|---|
| ஆரம்ப மூலதனம் | 400 000 | (02) |
| தேறிய கொடுப்பனவு | (319 000) | (01) |
| பற்றுக்கள் | (10 000) | (01) |
| தொலைபேசி கட்டணம் | (2 000) | (01) |
| நேரடி வைப்பு | 30 000 | (01) |
| | 99 000 | |

**(மொத்தம் 30 புள்ளிகள்)**

**3 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 புள்ளிகள் ஆகும்.
3 வது வினாவினை விண்ணப்பதாரிகளின் 93% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 10% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 33% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 40% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 17% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 அல்லது அதற்கும் கூடுதலாக பெற்றவர்கள் 17% என்பதுடன், 07 அல்லது அதனை விடக் குறைவாகப் புள்ளிகளைப் பெற்றவர்கள் 10% ம் ஆகும்.




இவ்வினாவிற்குரிய உபபகுதிகள் 3 இலும் இலகுதன்மை கூடுதலான பகுதி (1) என்பதுடன், அதன் இலகுதன்மை 78% ஆகும். அதேபோன்று இலகுதன்மை குறைவான உபபகுதி (2) என்பதுடன், அதன் இலகுதன்மை 24% ஆகும்.

பகுதி (3) (1) இன் இலகுதன்மை 78% ஆகும். கடன் கொடுத்தோருக்கு காசு கொடுக்கும்போதும் மற்றும் கடன்பட்டோரிடமிருந்து காசு பெறும்போதும், "கழிவினைப்" பொறுப்பு குறைவு, சொத்துக் குறைவு என்றவாறு சில விண்ணப்பதாரிகள் இனம் காணாதிருந்தார்கள். அத்துடன் கொடுக்கல் வாங்கல்களை விபரிக்கும்போதும் பெறுமதிகளின்றி குறிப்பிட்டிருந்தார்கள்.

பகுதி (3) (2) என்பவற்றின் இலகுதன்மை 24% ஆகும். ஆரம்ப தேறிய சொத்துக் கணிப்பீட்டின்போது கூடுதலான மாணவர்கள் கணினியின் பெறுமதியினை கவனத்தில் கொள்ளாதிருந்தார்கள். மேலதிகத் தகவல்களினூடாக இறுதித் தேறிய சொத்தினை சரியாகக் கணிப்பிடுவதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாதிருந்தது.

பகுதி (3) (3) இன் இலகுதன்மை 49% ஆகும். மேலதிகத் தகவல்களைப் பயன்படுத்தி கடன்கொடுத்தோர் மற்றும் வங்கி மீதிகளைக் கணிப்பிடுவதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாதிருந்தது.

கொடுக்கல் வாங்கல்களை விளக்கும்போது பெறுமதிகளுடன் விளக்குவது, மேலதிகத் தகவல்களின் உதவியுடன் இறுதி மீதிகளைக் கணிப்பது, அதன் உதவியுடன் இறுதித் தேறிய சொத்தினை சரியாகக் கணிப்பது என்பவை விளங்கும் வகையில் பல்வேறு பயிற்சிகளை வழங்கி, கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

04 ஆம் வினா

**4. (அ)** நாதன் ரயர் உற்பத்திக் கம்பனியின் 2014 மார்ச் மாதத்திற்கான சம்பளம் தொடர்பான தகவல்கள் பின்வருமாறு:

(எல்லாப் பெறுமதிகளும் ரூ. '000 இல்)

| விபரம் | ஊழியர் வகை: உற்பத்தி தொழிலாளர் | உற்பத்தி மேற்பார்வையாளர் | உற்பத்தி முகாமையாளர் | நிர்வாக உதவியாளர் |
|---|---|---|---|---|
| அடிப்படைச் சம்பளம் | 5 000 | 3 000 | 1 500 | 500 |
| ஊக்குவிப்புக் கொடுப்பனவு (துண்டு வீத அடிப்படையில்) | 2 500 | - | - | - |
| மேலதிக நேரம் | - | 500 | 250 | - |
| பிரயாணப் படி | - | 250 | 150 | - |
| உபகாரப் பணம் (கம்பனி இலாபத்தின் அடிப்படையில்) | 250 | 150 | 75 | 25 |
| **மொத்தச் சம்பளம்** | **7 750** | **3 900** | **1 975** | **525** |
| *கழிப்பனவுகள்:* | | | | |
| ஊழியர் கடன் பதிவழிப்பு | 300 | 100 | - | - |
| ஊ.சே.நி. பங்களிப்பு (10%) | 500 | 300 | 150 | 50 |
| **தேறிய சம்பளம்** | **6 950** | **3 500** | **1 825** | **475** |
| *கம்பனியின் பங்களிப்பு:* | | | | |
| ஊ.சே.நி. (15%) | 750 | 450 | 225 | 75 |
| ஊ.ந.நி. (3%) | 150 | 90 | 45 | 15 |

**மேலதிக தகவல்கள்:**

ஊக்குவிப்புக் கொடுப்பனவானது விஷேட வகை ரயர் ஒன்றை உற்பத்தி செய்வதற்கான கட்டளையை முடிவுறுத்தலுடன் தொடர்புடையதாகும்.

**வேண்டப்படுவது:**

31.03.2014 இல் முடிவடையும் மாதத்திற்கான பின்வருவன: (ஒவ்வொரு விடயத்துக்குமான உள்ளடக்கத்தையும் வெவ்வேறாகக் காட்டுக.)

(1) நேர்க்கூலிகள்

(2) உற்பத்தி மேந்தலைகளுள் உள்ளடங்கியுள்ள ஊழியர் தொடர்பான செலவுகள்

(3) ஊழியர்களுடன் தொடர்பான மொத்தச் செலவுகள் **(05 புள்ளிகள்)**

**(ஆ)** பின்வரும் தகவல்கள் 01.03.2014 இல் வியாபாரச் செயற்பாடுகளை ஆரம்பித்த வரையறுக்கப்பட்ட அமீன் கம்பனியுடன் தொடர்புடையனவாகும்.

(எல்லாப் பெறுமதிகளும் ரூ. '000 இல்)

*கடன்பட்டோர் பேரேட்டின் சுருக்கம்:*

| கடன்பட்டோர் | விற்பனை | கொடுத்த கழிவு | பெறப்பட்ட காசு | 31.03.2014 இல் உள்ளவாறான மீதி |
|---|---|---|---|---|
| அமலன் | 1 600 | 160 | 660 | 780 |
| கமலன் | 900 | 90 | 590 | 220 |
| சுமதி | 500 | - | - | 500 |
| **மொத்தம்** | **3 000** | **250** | **1250** | **1 500** |

*கடன்கொடுத்தோர் பேரேட்டின் சுருக்கம்:* (எல்லாப் பெறுமதிகளும் ரூ. '000 இல்)

| கடன்கொடுத்தோர் | கொள்வனவுகள் | பெற்ற கழிவு | செலுத்திய காசு | 31.03.2014 இல் உள்ளவாறான மீதி |
|---|---|---|---|---|
| சாமலி | 1 200 | 120 | 530 | 550 |
| மாலினி | 800 | 80 | 650 | 70 |
| லாமா | 400 | - | - | 400 |
| **மொத்தம்** | **2 400** | **200** | **1 180** | **1 020** |

**மேலதிக தகவல்கள்:**

(i) 31.03.2014 இல் கடன்பட்டோர், கடன்கொடுத்தோர் பேரேடுகளின் மொத்த மீதிகள் இத் தினத்திலுள்ள கட்டுப்பாட்டுக் கணக்கு மீதிகளுடன் சமப்படவில்லை. இது தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட பரிசீலனையின்போது பின்வருவன வெளிப்பட்டன.

- விற்பனை நாளேட்டின் மொத்தத் தொகை கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கிலும் விற்பனைக் கணக்கிலும் ரூ. 300 000 என பதியப்பட்டிருந்தது.
- கடன்பட்டோருக்கு அனுமதித்த கழிவானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் வரவிலிடப்பட்டுள்ளது. எவ்வாறாயினும் இது கொடுத்த கழிவுக் கணக்கில் சரியாக பதிவிடப்பட்டிருந்தது.
- கொள்வனவு நாளேட்டின் மொத்தத் தொகையானது கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கிலும், கொள்வனவுகள் கணக்கிலும் ரூ. 4 200 000 என பதியப்பட்டிருந்தது.
- லாமாவுக்குத் திருப்பி அனுப்பிய ரூ. 20 000 பொருட்கள் கடன்கொடுத்தோர் பேரேட்டிலுள்ள இவரின் கணக்கில் பதிவிடப்பட்டிருக்கவில்லை. இது பொதுப் பேரேட்டில் கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் வரவிலும் விற்பனைக் கணக்கில் செலவிலும் பதியப்பட்டிருந்தது.

(ii) 31.03.2014 இல் முடிவடைந்த மாதத்திற்கான கம்பனியின் வரைபு வருமானக் கூற்றில் நட்டம் ரூ. 2 000 000 என அறிக்கையிடப்பட்டிருந்தது. (இது மேலே கூறப்பட்ட தவறுகளைச் சீராக்குவதற்கு முன்பாகும்)

**வேண்டப்படுவது:**

(1) தவறுகளைத் திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள் *(விளம்பல் தேவையானது)*
(2) 31.03.2014 இல் முடிவடைந்த மாதத்திற்கான திருத்திய இலாபம் அல்லது நட்டம்
(3) மேலே குறிப்பிடப்பட்டுள்ள தவறுகளைத் திருத்துவதற்கு முன்னதான 2014 மார்ச் மாதத்திற்கான கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு
(4) மேலே குறிப்பிடப்பட்டுள்ள தவறுகளைத் திருத்தியதன் பின்னரான 2014 மார்ச் மாதத்திற்கான கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு **(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

விடை

**வினா இலக்கம் 04**

04. (அ)

ரூ.'000

| விபரம் | (1) நேர் கூலிகள் | | (2) உற்பத்தி மேந்தலைகள் | (3) ஊழியர்கள் தொடர்பான மொத்தச் செலவு | |
|---|---|---|---|---|---|
| அடிப்படைச் சம்பளம் | 5 000 | இரண்டு உருப்படிக்கு1 புள்ளி வீதம் (02) | 4 500 (01) | 10 000 | இரண்டு விடயங்களுக்கு 01 புள்ளி வீதம் மொத்தம் 02 புள்ளிகள் |
| ஊக்குவிப்பு கொடுப்பனவு | 2 500 | | - | 2 500 | |
| மேலதிக நேரம் | - | | 750 (01) | 750 | |
| பிரயாணப்படி | - | | 400 (01) | 400 | |
| உபகாரப் பணம் | - | | - | 500 (01) | |
| கம்பனியின் பங்களிப்பு : | | | | | |
| EPF (15%) | 750 | | 675 (01) | 1 500 | |
| ETF (3%) | 150 | | 135 (01) | 300 | |
| | 8 400 | | 6 460 | 15 950 | |
| | (02 புள்ளிகள்) | | (02 புள்ளிகள்) | (02 புள்ளிகள்) | |

(அ) (1) நாட்குறிப்பு பதிவுகள்

ரூ.'000

| | வரவு | செலவு | |
|---|---|---|---|
| கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு வரவு<br>இலாப நட்டக்கணக்கு /விற்பனைக் கணக்கு செலவு<br>(குறைத்து பதிந்த கடன் விற்பனையைத் திருத்தியது) | 2 700 | 2 700 | (02) |
| தொங்கல் கணக்கு வரவு<br>கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு செலவு<br>(கடன்பட்டோர் கணக்கில் வரவில் பதிந்த கொடுத்த கழிவைத் திருத்தியது) | 500 | 500 | (02) |
| கடன்கொடுத்தேர் கட்டுப்பாட்டுக் கணக்கு வரவு<br>கொள்வனவு கணக்கு / கஇலாபநட்டக் கணக்கு செலவு<br>(கூட்டிப் பதிந்த கடன் கொள்வனவைத் திருத்தியது) | 1 800 | 1 800 | (02) |
| இலாப நட்டக் கணக்கு / விற்பனைக் கணக்கு வரவு<br>இலாபநட்டக் கணக்கு / வெளித்திரும்பல் கணக்கு செலவு<br>(விற்வனைக் கணக்கில் பிழையாகப் பதிந்த வெளித்திரும்பலைத் திருத்தியது.) | 20 | 20 | (02) |

**(08 புள்ளிகள்)**

(2) திருத்திய இலாபம் ரூ.: 2 500 000 (05)

| | | |
|---|---|---|
| **செய்கை :** | | ரු'000 |
| கணிக்கிடப்பட்ட தேறிய நட்டம் | | (2 000) |
| கூட்டப்பட்டது : | | |
| விற்பனை | 2 700 (02) | |
| கொள்வனவு | 1 800 (02) | 4 500 |
| திருத்திய இலாபம் | | 2 500 |

**(05 புள்ளிகள்)**

(3) சீராக்குமுன் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு ரூ.'000

| | | | |
|---|---|---|---|
| விற்பனை | 300 (01) | காசு | 1 250 (01) |
| கொடுத்த கழிவு | 250 (01) | | |
| மீதி/கீ/கொ/செ | 700 | | |
| | 1 250 | | 1 250 |
| | | மீதி/கீ/கொ/வ | 700 |

**(03 புள்ளிகள்)**

(4) சீராக்கிய பின் கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு ரூ.'000

| | | | |
|---|---|---|---|
| காசு | 1 180 (01) | கொள்வனவு | 2 400 (01) |
| பெற்ற கழிவு | 200 (01) | | |
| வெளித்திரும்பல் | 20 (01) | | |
| மீதி/கீ/கொ/செ | 1 000 | | |
| | 2 400 | | 2 400 |
| | | மீதி/கீ/கொ/வ | 1 000 |

**மாற்று விடை :**

கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| காசு | 1 180 [01] | கொள்வனவு | 4 200 |
| பெற்ற கழிவு | 200 [01] | | |
| வெளித்திரும்பல் | 20 [01] | | |
| மீதி/கீ/கொ/செ | 2 800 | | |
| | 4 200 | | 4 200 |
| கொள்வனவு | 1 800 (01) | மீதி/கீ/கொ/செ | 2 800 (03) |
| மீதி/கீ/கொ/செ | 1 000 | | |
| | 2 800 | | 2 800 |
| | | மீதி/கீ/கொ/செ | 1 000 |

**(04 புள்ளிகள்)**
**(மொத்தம் 30 புள்ளிகள்)**

**4 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
4 வது வினாவினை விண்ணப்பதாரிகளின் 74% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 31% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 37% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 24% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 8% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதற்கும் கூடுதலான புள்ளிகளை 8% மானோர் மாத்திரமே பெற்றுள்ளதுடன், விண்ணப்பதாரிகளில் 31% மானோர் 07 அல்லது அதனிலும் குறைந்த புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய 4 உபபகுதிகளின் இரு உபபகுதிகளுக்கான இலகுதன்மை 50% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை குறைவான உபபகுதி (ஆ) (2) ஆக இருப்பதுடன், அதன் இலகுதன்மை 24% மாகும். இலகுதன்மை கூடுதலான உபபகுதி (அ) (3) ஆகும். அதன் இலகுதன்மை 59% மாகும்.

(4) (அ) (1) இன் இலகுதன்மை 30%ஆகும். நேர் கூலியினை தெளிவாக இனங்காண்பதற்கு பெரும்பாலான மாணவர்களால் முடியாமல் இருந்தது. (அ) (2) பகுதியின் இலகுதன்மை 24% ஆகும். உற்பத்தி பொது மேந்தலைக் கிரயத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள செலவினை சரியாக இனங்காண்பதற்கு பெரும்பாலான மாணவர்கள் தவறியுள்ளனர். (அ) (3) பகுதியின் இலகுதன்மை 40% ஆகும். ஊழியர் மொத்தச் செலவினையும் பெரும்பாலான மாணவர்கள் சரியாகக் கணிப்பிட்டிருக்கவில்லை.

(4) (ஆ) (1) பகுதியின் இலகுதன்மை 54% ஆகும். துணையேடுகளைப் பேணிச் செல்கின்ற சந்தர்ப்பத்தில் கட்டுப்பாடுக் கணக்கினூடாக வழுக்களைத் திருத்துதல் தொடர்பான விளக்கம் குறைவாகவே காணப்படுகின்றது என்பதை அறியக்கூடியதாக இருந்தது. மாணவர்களின் பெரும்பாலானவர்கள் விளம்பல் எழுதுவது தொடர்பில் கவனத்தை செலுத்தியிருக்கவில்லை.

(4) (ஆ) (2) பகுதியின் இலகுதன்மை 42% ஆகும். மதிப்பீட்டு நட்டத்தில் விற்பனை மற்றும் கொள்வனவின் குறைவு அதிகரிப்புச் சீராக்கம் தொடர்பிலான விளக்கம் குறைவாக உள்ளது. (ஆ) (3) பகுதியின் இலகுதன்மை 59% ஆகும். பெரும்பாலான மாணவர்கள் திருத்த முன்னருள்ள கட்டுப்பாட்டுக் கணக்கிற்குப் பதிலாக கடன்பட்டோர் பேரேட்டில் பொழிப்பாக்கப்பட்ட தகவல்களினூடாக கட்டுப்பாட்டுக் கணக்கினைத் தயாரித்திருந்தனர்.

(4) (ஆ) பகுதியின் இலகுதன்மை 56% ஆகும். பெரும்பாலான மாணவர்கள் கடன் கொடுநர் பேரேட்டின் பொழிப்பாக்கப்பட்ட தகவல்களினூடாக கடன்கொடுநர் கட்டுப்பாட்டுக் கணக்கினைத் தயாரித்திருந்ததுடன், கட்டுப்பாட்டுக் கணக்குடன் தொடர்புடைய வழுக்களைத் திருத்துதல் தொடர்பான விளக்கம் பெரும்பாலான மாணவர்களிடம் குறைவாகவே காணப்பட்டது.

05 ஆம் வினா

**5.** **(அ)** கீழே தரப்பட்டுள்ள தகவல்கள் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான வரையறுக்கப்பட்ட சண்முகி கம்பனிக்குச் சொந்தமாகவுள்ள இயந்திரத்துடன் தொடர்பானவையாகும்.

| **இயந்திர இலக்கம்** | **கொள்வனவுத் திகதி** | **கிரயம் (ரூ. '000)** | **எஞ்சிய பெறுமதி (ரூ. '000)** | **பயன்தரு ஆயுட் காலம் (வருடங்கள்)** |
|---|---|---|---|---|
| 1 | 01.10.2010 | 800 | 200 | 5 |
| 2 | 01.04.2011 | 1 600 | 100 | 6 |
| 3 | 01.07.2013 | 1 400 | 200 | 6 |
| | | **3 800** | | |

**மேலதிக தகவல்கள்:**

(i) எல்லா இயந்திரங்களும் அவை கொள்வனவு செய்யப்பட்ட திகதியிலிருந்து பாவனைக்குத் தயாரான நிலையில் உள்ளதுடன் அவை கிரயத்தில் வருடாந்தம் நேர்கோட்டு முறையின் கீழ் பெறுமானத்தேய்விடப்படுகின்றன.

(ii) இயந்திர இல. 1 ஆனது 01.10.2013 இல் ரூ. 550 000 இற்கு விற்பனை செய்யப்பட்டது.

(iii) இயந்திரம் இல. 2 இன் பயன்தரு ஆயுட் காலம் 01.04.2013 இல் 6 வருடங்களிலிருந்து 10 வருடங்களாக மீள்மதிப்பீடு செய்யப்பட்டது. எல்வாறாயினும் இதன் எஞ்சிய பெறுமதியில் எதுவித மாற்றமும் இல்லை.

**வேண்டப்படுவது:**

31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான பின்வரும் கணக்குகள்:

(1) இயந்திரம்

(2) திரண்ட பெறுமானத் தேய்வு - இயந்திரம்

(3) இயந்திரம் அகற்றுதல் **(05 புள்ளிகள்)**

**(ஆ)** கம்பனியொன்று 10 நாட்களுக்கு நடைபெறவிருக்கும் வியாபாரக் கண்காட்சியொன்றில் புதிய பொருளொன்றை அறிமுகப்படுத்தி விற்பனை செய்யவுள்ளது. இப் பொருளானது அதன் வழங்குனரால் அலகொன்று ரூ. 4 500 கிரயத்தில் கம்பனிக்கு வழங்கப்படுகிறது. இப் பொருளை அலகொன்று ரூ. 8 000 விலைக்கு விற்பனை செய்ய எதிர்பார்க்கப்பட்டபோதும் கண்காட்சியில் இப்பொருளுக்கு விற்பனை விலையில் 20% கழிவு வழங்கப்படும். எதிர்பார்க்கப்படும் கிரயங்கள் பின்வருமாறு:

| **விபரம்** | **ரூ.** |
|---|---|
| விற்பனைக்குப் பாவிக்கும் இடத்திற்கான வாடகை | 40 000 |
| துண்டுப் பிரசுரங்கள் அச்சிடுதல் கிரயம் | 5 000 |
| விற்பனை இடத்தின் முகாமையாளருக்கான படிகள் | 25 000 |
| விற்பனை உதவியாளருக்கான படி (நாளொன்றுக்கு) | 1 000 |
| விற்பனை செய்யப்படும் ஒவ்வொரு பொருளுடனும் பரிசாகக் கொடுக்கப்படும் கோப்பை ஒன்றின் விலை | 100 |

இக்காலப்பகுதிக்கு இரண்டு விற்பனையாளர்கள் நியமனம் செய்யப்படுவர்.

**வேண்டப்படுவது:**

(1) இச்செயற்பாட்டிற்கான மொத்த நிலையான கிரயம்

(2) இச்செயற்பாட்டின் மொத்தக் கிரயத்தை ஈடுசெய்வதற்கு விற்பனை செய்ய வேண்டிய அலகுகள்

(3) ரூ. 270 000 இலாபம் ஈட்டுவதற்கு விற்பனை செய்ய வேண்டிய அலகுகள்

(4) விற்பனை செய்யப்பட்ட ஒவ்வொரு அலகுக்கும் இதன் விற்பனை விலையில் 10% தரகு முகாமையாளருக்கு வழங்கப்படும்போது 100 அலகுகள் விற்பனையில் ஈட்டப்படும் இலாபம் (இது முகாமையாளருக்கு செலுத்தும் படிக்கு மேலதிகமானது.)

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

விடை

**வினா இல 05**

(அ) (1) இயந்திரக் கணக்கு ரூ.'000

| | | | |
|---|---|---|---|
| மீதி/கீ/கொ/வ | 2 400 (01) | இயந்திரம் அகற்றல் | 800 (01) |
| காசு | 1 400 (01) | மீதி/கீ/கொ/செ | 3 000 |
| | 3 800 | | 3 800 |
| மீதி/கீ/கொ/வ | 3 000 | | |

**(03 புள்ளிகள்)**

(2) இயந்திர பெறுமானத் தேய்வு ஏற்பாட்டுக் கணக்கு ரூ.'000

| | | | |
|---|---|---|---|
| இயந்திர அகற்றல் | 360 (01) | மீதி/கீ/கொ/வ | 800 (01) |
| | | மஇயந்திர தேய்வு | 335 (02) |
| மீதி/கீ/கொ/செ | 775 | | |
| | 1 135 | | 1 135 |
| | | மீதி/கீ/கொ/வ | 775 |

**(04 புள்ளிகள்)**

(3) இயந்திர அகற்றல் கணக்கு (01) ரூ.'000

| | | | |
|---|---|---|---|
| இயந்திரம் | 800 | இயந்திர தேய்வு ஏற்பாடு | 360 |
| இலாபம் | (01) 110 | காசு | 550 (01) |
| | 910 | | 910 |

**(03 புள்ளிகள்)**

**செய்கை :**

வருடத்திற்கான பெறுமானத் தேய்வு ரூ.'000

இயந்திரம் 1 - 120 x 1/2 = 60

இயந்திரம் 2 - $\frac{1600 - 100 - 500}{8}$ = 125 (01)

இயந்திரம்3 - $\frac{1400 - 200}{6}$ x 3/4 = 150

} (01)

= 335

(ஆ) (1) நிலையான கிரயம் 90 000 (05)

**செய்கை :**

| | | ரூ. | |
|---|---|---|---|
| வாடகை | = | 40 000 | (01) |
| துண்டுப்பிரசுரம் அச்சடித்தல் | = | 5 000 | (01) |
| விற்பனை முகாமையாளர் படி | = | 25 000 | (01) |
| மொத்த நிலையான கிரணம் | = | 20 000 | (02) |
| | | 90 000 | |

**(05 புள்ளிகள்)**

(2) 50 அலகுகள் (05)

**செய்கை :**

$$\frac{(01)\ 90\ 000}{1\ 800}\ (04)$$

(6 400 - 4 500 - 100)
[02] [01] [01]

**(05 புள்ளிகள்)**

(3) 200 அலகுகள் (04)

**செய்கை :**

$$\frac{(01)\ 90\ 000 + 270\ 000\ (01)}{(01)\ 1\ 800}$$

**(04 புள்ளிகள்)**

(4) ரூ. 26 000 இலாபம் (06)

**செய்கை :**

100 (01) x 1 160 (03) - (01) 90 000

6 400 - (4 500 + 100 + 640)
[01] [01] [01]

**(06 புள்ளிகள்)**

**5 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும். 5 ம் வினாவினை 72% வீதத்தினரே தெரிவு செய்திருந்தனர். அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 38% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 34% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 17% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 11% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதற்கும் மேலான புள்ளிகள் பெற்றவர்களின் எண்ணிக்கை 11% மாக இருப்பதுடன், விண்ணப்பதாரிகளில் 38% மானோர் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய உபபகுதிகள் 7 இன் 5 இற்கான இலகுச்சுட்டி 50% ஐ விட அதிகமாகும். ஆகக்கூடிய இலகுதன்மை (ஆ) (i) 69% ஆகும். குறைந்த இலகுதன்மை (அ) (2) 29% ம் (ஆ) 4 இன் இலகுதன்மை 24% ஆகும்.

(5) (அ) (1) இன் இலகுதன்மை 56% ஆகும். இயந்திரக் கணக்கின் ஆரம்ப மீதி ரூபா 2400000 இற்குப் பதிலாக ரூபா 3800000 ஐ எடுத்திருந்ததுடன், அகற்றிய இயந்திரத்தின் கிரயத்தை சரியாக இயந்திரக் கணக்கில் செலவு வைத்திருக்கவில்லை.

(5) (அ) (2) இன் இலகுதன்மை 29% ஆகும். தேய்வு ஏற்பாட்டுக் கணக்கின் ஆரம்ப மீதியினையும் மற்றும் வருடாந்த தேய்வின் அளவினையும் அகற்றப்பட்ட இயந்திரத்திற்குரிய திரண்ட தேய்வின் பெறுமதியினையும் கணிப்பது தொடர்பிலான விளக்கம் இல்லாதிருந்தது.

(5) (அ) (3) இன் இலகுதன்மை 61% ஆகும். இயந்திர அகற்றுதல் கணக்கினைத் தயாரிக்கும்போது அகற்றிய இயந்திரத்திற்குரிய திரண்ட தேய்வின் பெறுமதியினை சரியாகக் கணிக்காமை காரணமாக பெரும்பாலான மாணவர்களுக்கு புள்ளிகள் கிடைக்கவில்லை.

தேய்வினைக் கணிப்பிடல் மற்றும் அகற்றுதல் தொடர்பான விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

(5) (ஆ) (3) பகுதியின் இலகுதன்மை 54% ஐ விட அதிகமாகும். (2) (4) பகுதிகளின் இலகுதன்மை 44%, 24% ஆகும். பெரும்பாலான மாணவர்களிடம் பங்களிப்பினைக் கணிப்பது தொடர்பிலான விளக்கம் காணப்படாதிருந்தது.

எல்லைக் கிரயவியல் தொடர்பிலான எண்ணக்கரு மற்றும் கணிப்பிடல் தொடர்பிலான சிறந்த விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறை ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

06 ஆம் வினா

**6.** வரையறுக்கப்பட்ட சத்யா கம்பனி தனது செயற்பாடுகளை 01.04.2013 இல் ஆரம்பித்தது. இதன் முதல் வருட செயற்பாடுகளுக்கான நிதிக் கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

**31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான சுருக்கப்பட்ட முற்றும் அடங்கிய வருமானக் கூற்று**

| | ரூ.'000 |
|---|---|
| விற்பனைகள் | 6 250 |
| விற்பனைகள் கிரயம் | (2 850) |
| மொத்த இலாபம் | 3 400 |
| செலவுகள் | (2 500) |
| வரிக்கு முன்னதான இலாபம் | 900 |
| வருடத்திற்கான வரி | (300) |
| **வருடத்திற்கான இலாபம்** | **600** |
| **வருடத்திற்கான மொத்த முற்றும் அடங்கிய வருமானம்** | **600** |

**31.03.2014 இலுள்ளபடியான சுருக்கப்பட்ட நிதிநிலைமைக் கூற்று**

| | ரூ.'000 |
|---|---|
| ஆதனம், பொறி மற்றும் உபகரணம் (கொண்டுசெல் தொகையில்) | 6 000 |
| சரக்கிருப்பு | 1 500 |
| வியாபார வருமதிகள் (வியாபாரக் கடன்பட்டோர்) | 4 000 |
| வங்கியிலுள்ள காசு | 1 000 |
| | 12 500 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் (பங்கொன்று ரூ. 70 படி 100 000 பங்குகள்) | 7 000 |
| நிறுத்தி வைக்கப்பட்ட வருவாய்கள் | 500 |
| 12% வங்கிக்கடன் (01.04.2013 இல் 5 வருடங்களுக்குப் பெறப்பட்டது) | 2 500 |
| வியாபாரக் கொடுக்குமதிகள் (வியாபாரக் கடன் கொடுத்தோர்) | 2 150 |
| செலுத்த வேண்டிய வரி | 200 |
| செலுத்த வேண்டிய வட்டி | 150 |
| | 12 500 |

**மேலதிக தகவல்கள்:**

(i) எல்லா விற்பனைகளும், கொள்வனவுகளும் கடனடிப்படையில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

(ii) ஆதனம், பொறி மற்றும் உபகரணம் என்பன காசுக்குக் கொள்வனவு செய்யப்பட்டு பின்வருமாறு பெறுமானத்தேய்வு இடப்பட்டு இருந்தது. இப்பெறுமானத் தேய்வானது செலவுகளில் உள்ளடக்கப்பட்டுள்ளது.

| சொத்து | வருடத்திற்கான பெறுமானத்தேய்வு (ரூ.'000) | 31.03.2014 இல் கொண்டுசெல் தொகை (ரூ.'000) |
|---|---|---|
| மோட்டார் வாகனங்கள் | 400 | 3 600 |
| அலுவலக உபகரணங்கள் | 600 | 2 400 |
| மொத்தம் | 1 000 | 6 000 |

(iii) செலவானது வங்கிக் கடனுக்கான வட்டியையும் உள்ளடக்கியுள்ளது. எனினும் இவ்வருடத்தில் வட்டியின் அரைவாசி மாத்திரமே செலுத்தப்பட்டுள்ளது.

(iv) கம்பனியானது இவ்வருடத்தில் இடைக்காலப் பங்கிலாபத்தைச் செலுத்தியுள்ளது.

**வேண்டப்படுவது:**

(1) பின்வருவனவற்றை கணிப்பிடுக:

(i) உரிமையாண்மை திரும்பல் விகிதம்

(ii) வட்டிக் காப்பு விகிதம்

(iii) நடைமுறை விகிதம்

(iv) கடன் விகிதம்

(v) சொத்துப்புரள்வு விகிதம் (வருட இறுதியிலுள்ள மொத்தச் சொத்து அடிப்படையில்)

(2) LKAS 7 இன் படியான (காசுப் பாய்ச்சல் கூற்று) சத்யா கம்பனியின் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான காசுப் பாய்ச்சல் கூற்று

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

விடை

**வினா இலக்கம் 06**

(1) (i) உரிமையாண்மை திரும்பல் விகிதம் = 8%

**செய்கை :**

$$\frac{\text{வரிக்கு பின் இலாபம்}}{\text{உரிமை மூலதனம்}} \times 100 = \frac{600 \; (01)}{7\,500 \; (01)} \times 100$$

(ii) வட்டிக் காப்பு விகிதம் = 04 தடவைகள்

**செய்கை :**

$$\frac{\text{வரிக்கு முன் இலாபம் + வட்டி}}{\text{வட்டி}} = \frac{900 + 300 \; (01)}{300 \; (01)}$$

(iii) நடைமுறை விகிதம் = 2.6 : 1

**செய்கை :**

$$\frac{\text{நடைமுறை சொத்துக்கள்}}{\text{நடைமுறை பொறுப்புகள்}} = \frac{6\,500 \; (01)}{2\,500 \; (01)}$$

(iv) கடன் விகிதம் = 25%

**செய்கை :**

$$\frac{\text{கடன் மூலதனம்}}{\text{மொத்த இலாபம்}} \times 100 = \frac{2\,500 \; (01)}{10\,000 \; (01)} \times 100$$

(v) சொத்து புரள்வு விகிதம் = 0.5 தடவைகள்

**செய்கை :**

$$\frac{\text{விற்பனை}}{\text{மொத்தச் சொத்துக்கள்}} = \frac{6\,250 \; (01)}{12\,500 \; (01)}$$

**(10 புள்ளிகள்)**

(2) நேரில் முறை

வரையறுக்கப்பட்ட சத்யா கம்பனி
31.03.2014ல் முடிவடைந்த வருடத்திற்கான
காசுப்பாய்ச்சற்கூற்று (01)

(ரூ.000)

| | | |
|---|---|---|
| செயற்பாட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல் | | |
| வரிக்கு முன் செயற்பாட்டு இலாபம் | 900 (01) | |
| பெறுமானத் தேய்வு | 1 000 (01) | |
| வட்டிச் செலவுகள் | 300 (01) | |
| | 2 200 | |
| இருப்பு அதிகரிப்பு | (1 500) (01) | |
| வியாபார வருமதிகள் அதிகரிப்பு | (4 000) (01) | |
| வியாபார கொடுக்குமதிகள் அதிகரிப்பு | 2 150 (01) | |
| செயற்பாட்டில் உருவான காசு | (1 150) | |
| செலுத்திய வட்டி | (150) (01) | |
| செலுத்திய வரி | (100) (01) | |
| செயற்பாட்டு நடவடிக்கையில் பயன்படுத்திய தேறிய காசு (01) | | (1 400) |
| **முதலீட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| ஆதனம் பொறி உபகரணம் கொள்வனவு (4 000+3 000) 01 01 | (7 000) (02) | |
| முதலீட்டு நடவடிக்கையில் பயன்படுத்திய தேறிய காசு (01) | | (7 000) |
| **நிதியீட்ட நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| சாதாரண பங்கு வழங்கல் | 7 000 (01) | |
| வங்கிக்கடன் பெற்றது | 2 500 (01) | |
| செலுத்திய பங்கிலாபம் | (100) (02) | |
| நிதியீட்ட நடவடிக்கையில் உருவான தேறிய காசு (01) | | 9 400 |
| காசும் காசுக்கு சமமானவற்றின் தேறிய அதிகரிப்பு | | 1 000 (01) |
| 2013.04.01 ல் காசும் காசுக்கு சமமானவை (01) | | - |
| 2014.03.31 ல் காசும் காசுக்கு சமமானவை | | 1 000 |

நேர் முறை

வரையறுக்கப்பட்ட சத்யா கம்பனி
31.03.2014ல் முடிவடைந்த வருடத்திற்கான
காசுப்பாய்ச்சற்கூற்று (01)

(ரூ.000)

| | | |
|---|---|---|
| **செயற்பாட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| வியாபார வருமதிகள் மூலம் பெற்ற காசு (6 250 - 4 000) [01] [01] | 2 250 (02) | |
| வியாபார கொடுக்குமதிகளுக்கும் ஊழியர்களுக்குமம் கொடுத்த காசு | (3 400) (04) | |
| 1 200 (2 500 - 300 - 1 000) + 2 200 (4 350 - 2 150) [01] [01] [01] [01] | | |
| செயற்பாட்டில் உருவான காசு | (1 150) | |
| செலுத்திய வரி | (150) (01) | |
| செலுத்திய வட்டி | (100) (01) | |
| வசெயற்பாட்டு நடவடிக்கையில் பயன்படுத்திய தேறிய காசு (01) | | (1 400) |
| **முதலீட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| ஆதனம் பொறி உபகரணம் கொள்வனவு (4 000+3 000) [01] [01] | (7 000) (02) | |
| முதலீட்டு நடவடிக்கையில் பயன்படுத்திய தேறிய காசு (01) | | (7 000) |
| **நிதியீட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| வசாதாரண பங்கு வழங்கல் | 7 000 (01) | |
| வங்கிக்கடன் பெற்றது | 2 500 (01) | |
| வசெலுத்திய பங்கிலாபம் | (100) (02) | |
| நிதியீட்ட நடவடிக்கை மூலம் உருவான தேறிய காசு (01) | | 9 400 |
| காசும் காசுக்கு சமமானவற்றின் தேறிய அதிகரிப்பு | | 1 000 (01) |
| 2013.04.01 ல் காசும் காசுக்கு சமமானவை (01) | | - |
| 2014.03.31 ல் காசும் காசுக்கு சமமானவை | | 1 000 |

**(20 புள்ளிகள்)**

**6 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும். 6 ம் வினாவினை விண்ணப்பதாரிகளில் 63% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.

அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 25% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 28% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 23% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 24% ம்,

என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனை விடக்கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்களின் எண்ணிக்கை 24% மாக இருப்பதுடன், விண்ணப்பதாரிகளில் 25% மானவர்கள் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய உபபகுதிகள் 6 ஆகும். அதில் கூடுதலான இலகுதன்மை 1 (iii) பகுதிக்கே காணப்படுவதுடன், அது 76% ஆகும். இலகுதன்மை குறைந்த பகுதி 1 (iv) ஆக இருப்பதுடன் அதன் இலகுதன்மை 48% ஆகும்.

(6) (1) (iv) இன் இலகுதன்மை 48% ஆகும். கடன் விகிதத்தை சரியாக கணிப்பதற்கு பெரும்பாலான மாணவர்களினால் முடியவில்லை. மொத்த மூலதனம் மற்றும் கடன் மூலதனம் தொடர்பிலான விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறை ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

(6) (2) பகுதியின் இலகுதன்மை 50% ஆகும். காசுப்பாய்ச்சல் கூற்றில் நேரில் முறையில் செயற்பாட்டு கருமங்களைக் கணிப்பது தொடர்பான விளக்கம் மாணவர்களிடம் குறைவாகவே காணப்படுகின்றது என்பதனால் அவ்விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

07 ஆம் வினா

**7.** **(அ)** கம்பனியொன்று புதிய பொருளொன்றை உற்பத்தி செய்யத் திட்டமிடுகிறது. இந் நோக்கத்திற்காக 4 வருட பயன்தரு ஆயுட் காலத்தைக் கொண்ட புதிய இயந்திரமொன்றை ரூ. 2 000 000 இற்கு கொள்வனவு செய்ய முடியும். 4 வருடங்களுக்குப் பின் இவ் இயந்திரத்தின் எஞ்சிய பெறுமதி ரூ. 200 000 ஆகும். இப் பொருளின் எதிர்பார்க்கப்படும் கேள்வி பின்வருமாறு:

| வருடம் | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| கேள்வி (அலகுகள்) | 4 000 | 5 200 | 6000 | 6 000 |

இதன் எதிர்பார்க்கப்படும் விற்பனை விலை அலகொன்றிற்கு ரூ. 800 ஆகும். அலகொன்றுக்கான மாறும் கிரயம் ரூ. 500 ஆகும். புதிய இயந்திரத்தின் பெறுமானத் தேய்வு தவிர்த்து நிலையான உற்பத்திக் கிரயமானது உற்பத்தியின் முதல் வருடத்தில் ரூ. 300 000 ஆகும். இத் தொகை வருடாந்தம் ரூ. 60 000 இனால் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இதன் தேவைப்படும் திரும்பல் வீதம் 10% ஆகும்.

தேவைப்படும் திரும்பல் வீதம் 10% இல் கழிவீட்டுக் காரணி: (முதலாம் தசம தானத்திற்கு)

| வருடம் | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| கழிவீட்டுக் காரணி | 0.9 | 0.8 | 0.7 | 0.6 |

**வேண்டப்படுவது:**

(1) இச் செயற்றிட்டத்தின் திரும்பப் பெறும் காலமும் தேறிய நிகழ்காலப் பெறுமதியும்

(2) தேறிய நிகழ்காலப் பெறுமதியின் அடிப்படையில் இவ் இயந்திரத்தைக் கொள்வனவு செய்வதா அல்லது இல்லையா என்பதற்கான காரணங்களுடன் கூடிய தீர்மானம் **(05 புள்ளிகள்)**

**(ஆ)** 01.04.2013 இல் உயர்தொழில் கல்வி அபிவிருத்தி நிலையமொன்று பாடசாலை ஒன்றைச் சூழவுள்ள பகுதியிலுள்ள இளைஞர்களுக்கு சுயவேலைவாய்ப்புப் பற்றி பயிற்சியளிப்பதற்காக உருவாக்கப்பட்டது. பின்வரும் தகவல்கள் 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்துடன் தொடர்புடையவையாகும்.

(i) நுழைவுக் கட்டணமும் சந்தாவும்

- இந்நிலையமானது 50 அங்கத்தவர்களுடன் உருவாக்கப்பட்டது.
- ஒவ்வொரு அங்கத்தவரும் நுழைவுக்கட்டணமாக ரூ. 500 செலுத்தியுள்ளனர்.
- அங்கத்தவர் ஒருவருக்கான மாதாந்த சந்தா ரூ. 500 ஆகும்.
- 40 அங்கத்தவர்கள் வருடத்திற்கான சந்தாவைச் செலுத்தியுள்ளனர். மிகுதியான 10 அங்கத்தவர்கள் 9 மாதங்களுக்கு மாத்திரம் சந்தாப்பணத்தைச் செலுத்தியுள்ளனர்.

(ii) பாடநெறியை நடாத்துதல்:

- முதலாவது பாடநெறியாக 01.06.2013 இல் ஒரு வருட காலங்கொண்ட மோட்டார் இயந்திரவியல் பாடநெறியொன்று அறிமுகப்படுத்தப்பட்டது.
- மாணவர் ஒருவருக்கான மாதாந்த பாடநெறிக் கட்டணம் ரூ. 1 000 ஆகும். 25 மாணவர்கள் இப்பாடநெறிக்குப் பதிவுசெய்துள்ளனர். இவர்களில் 20 மாணவர்கள் பாடநெறியின் முழுக் காலத்திற்கும் பாடநெறிக் கட்டணத்தைச் செலுத்தினர். மிகுதி மாணவர்கள் 6 மாதங்களுக்கான பாடநெறிக் கட்டணத்தை மாத்திரமே செலுத்தியுள்ளனர்.
- இப்பாடநெறி பாடசாலையிலேயே நடாத்தப்படுவதுடன், அவ் வசதிகளைப் பயன்படுத்துவதற்காக மாதாந்த கொடுப்பனவாக ரூ. 2 000 செலுத்தப்பட்டது.
- இப்பாடநெறியைக் கற்பிப்பவர் எதுவித கட்டணமும் பெறவில்லை. ஆனால் அவருக்கு மாதாந்தம் ரூ. 3000 பிரயாணச் செலவாகச் செலுத்தப்பட்டது.

(iii) நிலையத்தின் முகாமை:

- 01.04.2013 இல் 4 வருட பயன்தரு ஆயுட்காலத்தைக் கொண்ட ரூ. 360 000 பெறுமதியான முச்சக்கர வண்டியொன்று அன்பளிப்பாகப் பெற்றுக்கொள்ளப்பட்டதுடன் அது அத்தினத்திலிருந்து பயன்படுத்தப்பட்டு நேர்கோட்டு முறையில் பெறுமானத்தேய்விடப்படுகின்றது.
- இவ் அன்பளிப்பானது நடைமுறை ஆண்டிலிருந்து 4 வருடங்களுக்கான சமமான வருமானம் என இனம் காணப்பட்டுள்ளது.
- இந்நிறுவனத்தின் முகாமையாளருக்கு 01.04.2013 இலிருந்து மாதாந்தம் படியாக ரூ. 10 000 இனை தொடர்ந்துவரும் மாதத்தின் 10ஆம் நாளில் செலுத்த வேண்டும்.
- இவ்வருடத்தில் எழுதுகருவிகள், முச்சக்கரவண்டி ஓட்டுதல் செலவுகள் என்பவற்றுக்காக முறையே ரூ. 60 000, ரூ. 20 000 செலுத்தப்பட்டது. இவ்வாண்டில் ரூ. 40 000 பெறுமதியான எழுதுகருவிகள் மாத்திரமே பயன்படுத்தப்பட்டுள்ளன.

**வேண்டப்படுவது:**

உயர்தொழில் கல்வி அபிவிருத்தி நிலையத்திற்கான பின்வருவன:

(1) 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான கொள்ளல் கொடுத்தல் கணக்கு

(2) 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானச் செலவுக் கணக்கு

(3) 31.03.2014 இல் உள்ளவாறான திரண்ட நிதி **(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

விடை

**வினா இலக்கம் 07**

(அ) (1) திரும்பப் பெறும் காலம் = 01 வருடமும் 11 மாதங்களும் (02)

**செய்கை :**

| ஆண்டு | தேறிய காசுப்பாய்ச்சல் | திரண்ட தேறிய காசுப்பாய்ச்சல் |
|---|---|---|
| | (ரூ. 000) | |
| 0 | (2 000) | (2 000) |
| 1 | 900 | (1 100) |
| 2 | 1 200 | 100 |
| 3 | 1 380 | |
| 4 | 1 520 | |

01 வருடம் + $\frac{1\ 100}{1\ 200}$ x 12 மாதங்கள் (01)

தேறிய நிகழ்கால பெறுமதி =ரூ. 1 648 000 (06)

**செய்கை :**

(ரூ.000)

| விபரம் | $Y_0$ | $Y_1$ | $Y_2$ | $Y_3$ | $Y_4$ |
|---|---|---|---|---|---|
| இயந்திர கிரயம் | (2 000) | - | - | - | - |
| இயந்திரத்தின் எஞ்சும் பெறுமதி | - | - | - | - | 200 |
| விற்பனை வருமானம் | - | 3 200 | 4 160 | 4 800 | 4 800 |
| மாறும் செலவுகள் | - | (2 000) | (2 600) | (3 000) | (3 000) |
| நிலையான உற்பத்திக் கிரயம் | - | (300) | (360) | (420) | (480) |
| தேறிய காசுப்பாய்ச்சல் | (2 000) | 900 | 1 200 | 1 380 | 1 520 |
| 10% கழிவுக் காரணி | 1.00 | 0.9 | 0.8 | 0.7 | 0.6 |
| கழிவு செய்யப்பட்ட தேறிய காசுப் பாய்ச்சல் | (2 000) (01) | 810 (01) | 960 (01) | 966 (01) | 912 (02) |

உருப்படி 3 இற்கு 01 புள்ளி வீதம் மொத்தம் (05) புள்ளிகள்

**(08 புள்ளிகள்)**

(2) இயந்திரத்தைக் கொள்வனவு செய்யலாம். (01)

காரணம் : தேறிய நிகழ்கால பெறுமதி நேர்க்கணியமாகக் காணப்படுகின்றது. (01)

**(02 புள்ளிகள்)**

**விடை**

(ஆ) (1) 2014.03.31 ல் முடிவடைந்த வருடத்திற்கான
கொள்ளல் கொடுத்தல் கணக்கு

| | ரூ | | | ரூ | |
|---|---|---|---|---|---|
| நுழைவுக் கட்டணம் | 25 000 (01) | பாடநெறிச் செலவு | 20 000 | (01) |
| அங்கத்துவ சந்தா | 285 000 (02) | பிரயாணச் செலவு | 30 000 | (01) |
| பாடநெறி வருமானம் | 270 000 (02) | முகாமையாளர் சம்பளம் | 110 000 | (01) |
| | | எழுது கருவிகள் | 60 000 | } (01) |
| | | முச்சக்கரவண்டிய ஓடும் செலவு | 20 000 | |
| | | மீதி/கீ/கொ/செ | 340 000 | |
| | 580 000 | | 580 000 | |

**(09 புள்ளிகள்)**

(2) 2014.03.31 ல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானச் செலவுக் கணக்கு

| | ரூ. | |
|---|---|---|
| **வருமானங்கள்** | | |
| நுழைவுக் கட்டணம் | 25 000 | |
| அங்கத்துவ சந்தா | 300 000 | (01) |
| பாடநெறி வருமானம் | 250 000 | (01) |
| முச்சக்கரவண்டி அன்பளிப்பு | 90 000 | (01) |
| | 665 000 | |
| **செலவுகள்** | | |
| பாடநெறிச் செலவுகள் | (20 000) | |
| பிரயாணச் செலவுகள் | (30 000) | |
| முச்சக்கரவண்டி பெ.தேய்வு | (90 000) | (01) |
| முகாமையாளர் சம்பளம் | (120 000) | (01) |
| எழுது கருவிகள் | (40 000) | (01) |
| முச்சக்கரவண்டி ஓடும் செலவு | (20 000) | |
| வருமான மிகை (01) | 345 000 | |

(உருப்படிகள் 02 இற்கு 01 புள்ளி வீதம் (02) புள்ளிகள்)
**(09 புள்ளிகள்)**

(3) 2014.03.31 ல் உள்ளவாறான திரண்ட நிதி : ரூ. 345 000

**(02 புள்ளிகள்)**

**7 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும். 7 ம் வினாவினை விண்ணப்பதாரிகளில் 68% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.

அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 10% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 33% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 40% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 17% ம்,

என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனை விடக்கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் 17% மாக காணப்படுவதுடன், விண்ணப்பதாரிகளில் 10% மானோர் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 05 உபபகுதிகளில் (அ) (2) பகுதிக்கான இலகுதன்மை 55% இற்கும் மேற்பட்டதாகும். ஏனைய எல்லா பகுதிகளினதும் இலகுதன்மை 33% இற்கும் குறைவாகும்.

(7) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 32% ஆகும்.
(அ) (2) பகுதியின் இலகுதன்மை 55% ஆகும்.

ஒவ்வொரு வருடத்தினதும் காசு உட்பாய்ச்சல் மற்றும் காசு வெளிப்பாய்ச்சல் என்பவற்றை சரியாகக் கணிப்பிட முடியாமையினால் பெரும்பாலான மாணவர்களுக்கு தேறிய காசுப்பாய்ச்சலினை பெற்றுக் கொள்வதற்கு முடியாதிருந்தது. அதனால் அவர்களால் சரியாக மீளச் செலுத்தும் காலம் மற்றும் தேறிய நிகழ்காலப் பெறுமதியினைக் கணிக்க முடியவில்லை.

(7) (ஆ) (1), (2), (3) பகுதிகளின் இலகுதன்மை 33% ஐ விடக் குறைவானதாகும்.

பெறுவனவு கொடுப்பனவினை சரியாகக் கணப்பிடுவது தொடர்பில் மாணவர்கள் விளங்கியிருக்கவில்லை. அங்கத்தவர் சந்தா மூலம் பெற்ற வருமானம், பாடநெறிக் கட்டணம், மற்றும் காசாகச் செலுத்திய முகாமையாளர் கொடுப்பனவு, ஆலோசகரின் போக்குவரத்துக் கட்டணம் என்பவை சரியாகக் கணிக்கப்படாமையினால் இப்பகுதியின் இலகுதன்மை குறைவடைந்திருந்தது. வருமானச் செலவுக் கணக்கினைத் தயாரிக்கும்போது பின்வரும் உருப்படிகள் சரியாக இனம் காணப்படவில்லை. பாட நெறிக் கட்டணம், முச்சக்கரவண்டி நன்கொடை, அங்கத்துவர் சந்தா, வருமானம், ஆலோசகரின் போக்குவரத்துக் கட்டணம், முகாமையாளரின் கொடுப்பனவு, இலாப நோக்கமற்ற அமைப்புக்களின் காணப்படுகின்ற புறச் செயற்பாடுகள் என்பவற்றை உதாரணமாகப் பயன்படுத்தி வருடத்தினுள் பெற்ற பணத்தின் பெறுமதி, வருடத்திற்குரிய வருமான அளவு என்பவை விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளை ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும்.

2.2.3 **வினாத்தாள் II இற்கு விடையளித்தல் தொடர்பான முழு அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் :**




வினாத்தாள் II இல் 2 ஆவது வினாவினைத் தவிர்ந்த ஏனைய வினாக்களின் இலகுதன்மை 39% அல்லது அதனை விடக் கூடுதலானதாகும்.

வினாத்தாள் II இலுள்ள வினாக்களில் 55% இற்கும் மேற்பட்ட இலகுதன்மையினை 2 ஆவது வினாவிலே காண முடிந்ததுடன், குறைந்த இலகுதன்மையாகிய 34% இனை 7 ஆவது வினாவில் காணமுடிந்தது.

முதலாவது இரண்டாவது வினாக்கள் கட்டாயமானதாகும். இவ்விருவினாக்களில் கூடுதலான இலகுதன்மை 2வது வினாவில் காட்டப்பட்டுள்ளதுடன் அதன் இலகுதன்மை 55% மாகும்.

3 ஆவது வினா தொடக்கம் 7 ஆவது வினா வரையான வினாக்கள் விண்ணப்பதாரிகள் தெரிவு செய்வதற்கான வினாக்கள் என்பதுடன் அவற்றில் கூடுதலான இலகுதன்மையினை 3 ஆவது 6 ஆவது வினாக்களிலே காணமுடிந்தது. அதன் இலகுதன்மை 54% மாகும். வினாக்களைத் தெரிவு செய்யும்போதும் கூடுதலானோர் 3 ஆவது வினாவையே தெரிவு செய்திருந்தனர். அதன் சதவீதம் 94% ஆகும். 2 ஆவது வினாப்பத்திரத்தில் தெரிவு வினாக்களில் குறைந்த இலகுதன்மை 7 ஆவது வினாவிற்கே காணப்பட்டது என்பதுடன் அதன் சதவீதம் 34% ஆகும்.

தெரிவுசெய்வதற்கு வழங்கப்பட்ட வினாக்களில் இரண்டாவதாக 4 ஆவது வினாவையே கூடுதலானோர் தெரிவு செய்துள்ளதுடன், அதன் தெரிவு வீதம் 68% என்பதுடன் அதன் இலகுதன்மை 46% ஆகும்.

# பகுதி III

3.0 **விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்களும் ஆலோசனைகளும் :**

3.1. **விடையளிக்கும் போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்கள் :**

**பொதுவான அறிவுருத்தல்கள்**

* வினாப்பத்திரத்திலுள்ள பிரதான அறிவுறுத்தல்களை வாசித்து விளங்கிக்கொள்ள வேண்டும். அதாவது ஒவ்வொரு பகுதியிலுமிருந்து எத்தனை வினாக்களுக்கு விடையளிக்கப்பட வேண்டும், எந்த வினா கட்டாயமானது, எவ்வளவு காலம் வழங்கப்பட்டுள்ளது, எவ்வளவு புள்ளிகள் கிடைக்கப்பெறும் என்பன தொடர்பாகக் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும். வினாக்களை நன்கு வாசித்து சரியாக விளங்கி வினாக்கள் தெரிவு செய்யப்பட வேண்டும்.
* பத்திரம் I இற்கு விடையளிக்கும்போது மிகச் சரியான விடையை மட்டுமே தெரிவுசெய்ய வேண்டும்.
* பத்திரம் II இற்கு விடையளிக்கும்போது ஒவ்வொரு பிரதான வினாவையும் புதிய தாளில் எழுதத் தொடங்க வேண்டும்.
* விடைகள் தெளிவான கையெழுத்தில் எழுதப்படல் வேண்டும்.
* பரீட்சார்த்திகள் விடைத்தாளின் எல்லாப் பக்கங்களிலும் உரிய இடங்களில் தமது சுட்டெண்ணை எழுதுதல் வேண்டும்.
* வினாத்தாள் I இல் 1 - 30 வரையிலான வினாக்களுக்கு விடையளிக்கும்போது மிக நெருக்கமான விடைகளில் மிகச் சரியானதை தெரிவு செய்தல் வேண்டும்.
* வினாத்தாள் I இல் 31 - 50 வரையான வினாக்களுக்கு விடையளிக்கும்போது நீண்ட விளக்கங்களை எழுதக்கூடாது.
* வினா இலக்கம், உபபிரிவுகளின் இலக்கங்கள் சரியாக எழுதப்பட வேண்டும்.
* விடைத்தாளில் பக்கங்களை சேர்ப்பதாயின் சரியாக இலக்கமிட்டு அதனைக் கட்டுதல் வேண்டும்.
* சுருக்க விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் விரிவாக விடையளிப்பதை தவிர்ப்பதோடு, விரிவாக விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் சுருக்கமாக விடையளித்தலையும் தவிர்த்தல் வேண்டும்.
* வினாவில் கேட்கப்பட்டுள்ளவாறு விடைகள் தர்க்கரீதியாகவும், பகுப்பாய்வு முறையிலும் சமர்ப்பிக்கப்படல் வேண்டும்.
* II ஆம் வினாப்பத்திரத்திற்கு விடையெழுதும்போது பிரதான வினாவின் உபபிரிவுகள் அனைத்தையும் நன்கு வாசித்து ஒவ்வொரு உபபிரிவுக்குமான எதிர்பார்க்கப்பட்ட விடையினை மாத்திரம் எழுதுதல் வேண்டும்.
* வினாக்களுக்கு விடையளிக்கும்போது வழங்கப்பட்டுள்ள நேரத்தினை சரியான முறையில் முகாமைத்துவம் செய்துகொள்ள வேண்டும்.
* விடையெழுதும்போது சிவப்பு, பச்சை நிறப் பேனாக்களை பாவித்தலைத் தவிர்க்கவும்.
* விடைக்குரிய புள்ளிகளின் அளவு, காலம் என்பவற்றுக்கிடையில் காணப்படும் தொடர்புகளுக்கேற்ப நேர முகாமைத்துவத்தை பின்பற்றுதல் வேண்டும்.

**விசேட அறிவுருத்தல்கள் :**

1. வினாவுக்கான விடைகள் படிப்படியாக முன்வைக்கப்படல் வேண்டும்.
2. விடையளிக்கும் போது ஆயிரங்களில் முன்வைப்பதாயின் சகல தொகைகளும் ஆயிரங்களில் என்பதைக் குறிப்பிட வேண்டும். (அதாவது 'ரூபா 000' என)
3. ஒவ்வொரு வினாவுக்குமான முற்செய்கைகள் அந்தந்த வினாக்களுடன் முன்வைக்கப்படல் வேண்டும்.
4. வினாவின் உபபகுதிகள் காணப்படுமாயின், விடைக்குரிய உபபகுதி இலக்கத்தினை சரியாக குறிப்பிட்டு முன்வைத்தல் வேண்டும்.
5. வினாவின் உபபகுதிகள் காணப்படுமாயின், அதன் விடைகளை எல்லா இடங்களிலும் பரவலாக எழுதக் கூடாது.
6. இலக்கங்களைத் தெளிவாக எழுதுதல் வேண்டும்.
7. தான் பெற்ற விடையினைப் பயன்படுத்தி முழுமையான விடையினை வழங்குதல்.

## 3.2. கற்றல் - கற்பித்தல் தொடர்பான கருத்துகளும் ஆலோசனைகளும் :

* பாடத்திட்டம், ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி, 1995 ஆம் 15 ஆம் இலக்கம் கொண்ட கணக்கீட்டு, கணக்காய்வு நியமச் சட்டம், 2007 ஆம் 07 ஆம் இலக்கம் கம்பனிச் சட்டம், உயர் தரத்திற்கு விதந்துரைக்கப்பட்ட கணக்கீட்டு நியமங்கள் தொடர்பில் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் வெளியிட்டுள்ள,
  (1) கணக்கீட்டு நியமங்களும், கம்பனிக் கணக்குகளும்
  (2) கிரய, முகாமைத்துவக் கணக்கீடு.

  என்பவை தொடர்பில் ஆசிரியர்களைப் போன்றே மாணவர்களும் அறிந்து கொள்வதுடன், அவற்றைப் பயன்படுத்துதலும் வேண்டும்.

* கணக்கீட்டு வினாப்பத்திரத்திற்கு விடையளிக்கும் போது வழங்கப்பட்டுள்ள பிரச்சினைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதாயின் வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் கருமங்களின் போது வணிக உலகில் நடைமுறை ரீதியிலான பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு பயிற்சிகளை தயாரித்து வழங்கள் மிக முக்கியமாகும்.

* வாசித்தல், எழுதுதல் என்பவற்றில் காணப்படும் குறைபாடு காரணமாக வினாக்களை விளங்கிக் கொள்வதிலும் வெளிப்படுத்தும் திறனிலும் காணப்படும் பிரச்சினைகளை இழிவு படுத்திக் கொள்வதற்கான வேலைத்திட்டங்களை நடைமுறைப்படுத்துதல் வேண்டும்.

* நடைமுறை வணிக உலகில் பயன்படுத்தப்படுகின்ற முதன்மை ஆவணங்கள், கணக்கீட்டறிக்கைகள் என்பவற்றை வகுப்பறைக் கற்பித்தல் துணைச் சாதனங்களாக பயன்படுத்தி பாடத்தினை விருத்தி செய்வதற்குத் தேவையான அனுபவங்களை உறுதி செய்வதற்கு வழிகாட்டுதல் அவசியம்.
  உதாரணம் - மூல ஆவணங்கள்
  - வங்கிக் கூற்று
  - சம்பளப் பட்டியல்
  - இருப்பு அறிக்கை (இன்வென்றி அறிக்கை)
  - வருடாந்த அறிக்கை

* இப்பாடம் தனக்கு மாத்திரமன்றி சமூகத்திற்கும் சம அளவில் முக்கியத்துவமுடைய பாடமொன்றாகையால் சகல வேளைகளிலும் கற்றல் செயலொழுங்குகளை நல்ல விளக்கத்துடனும், தர்க்க ரீதியாகவும், மனதை ஈர்க்கும் வகையிலும் பாட அலகினை ஏன் கற்றல் வேண்டும் என்பது தொடர்பில் மாணவர்களின் மனதில் பதியும் வகையிலும் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் விருத்தி செய்யப்படல் வேண்டும்.

* இப்பாடமானது தீர்மானமெடுத்தலுக்கு முக்கியமான பாடமொன்றாக இருப்பதனால் ஒவ்வொரு பாட அலகுகளையும் கற்பிக்கும் போது கற்றல் உபகரணங்களையும், கருவிகளையும் பாவிப்பதனூடாக மகிழ்ச்சியான கற்றற் சூழலொன்றைக் கட்டியெழுப்புவதற்கும், திறன்களை விருத்தி செய்வதற்குமான சந்தர்ப்பத்தை பெற்றுக் கொடுத்தல் பொருத்தமானது.

* நவீன பாட அறிவினை விருத்தி செய்து கொள்வதற்கும், இற்றைப்படுத்துவதற்கும் தொடர்ச்சியாக செயற்படும் ஆசிரியர்கள், திறன்கள் நிறைந்த ஆக்கச்சக்தியுள்ள நபர்கள் என்பதுடன் அவர்கள் மாணவர் சமுதாயத்திற்கு பாரிய பங்களிப்பை வழங்குபவர்களுமாவர்.